

குழந்தைகளின் ஆகாரங்கள் எல்லாவற்றிலும் மிகப் பரிசுத்தமானதும் சுலபமானதும்.

க்ளாக்ஸோ பால் ஆகாரங்களின் (க்ளாக்ஸோ மில்க்புட்) பரிசுத்தமும் புதுமையும், க்ளாக்ஸோ செய்முறையில் ஆரம்பமுதற் கொண்டே நிர்ணயிக்கப் படுகிறது. இம்முறை பாலின் போஷாக்குதரும் தயிர்ப்பாகத்தை எளிதில் ஜீரணிக்கத் தக்கதாகச் செய்கிறது. மற்றொரு முக்கிய விஷயம், க்ளாக்ஸோ ஒரு நிமிஷத்தில் தயாராகும். அதாவது அவ்வளவு எளிதில் தயாரிக்கக்கூடும். க்ளாக்ஸோ கைபடாமல் தயாரிக்கப்பட்டது. டப்பாக்களில் அது எப்பொழுதும், இனிப்பாயும், புதுமையாயுமிருப்பதோடு, எச்சமயத்திலும் உபயோகத்திற்குத் தயாராயுமிருக்கிறது.

குழந்தைகளுக்கேற்ற
பூர்ணமான பால் ஆகாரம்.







க்ளாக்ஸோ லேபரடரீஸ் (இந்தியா) லிமிடெட்.
பம்பாய் – கல்கத்தா – மதராஸ்.

# பாதியிலே வந்துட்டான்!

பாதேசி

பள்ளிக்கூடம் போனபிள்ளை
பாதியிலே வந்துட்டான்!
துள்ளிக் கன்றுபோல ஓடித்
தோட்டவேலை செய்கிறான்!

"அம்மா! கொஞ்சம் சோறுபோடு
அவரிக்கொல்லை போகணும்
சும்மாக் குந்திக்கிட்டிருந்தால்
கம்பு, சோளம், விளையுமா?

ஐயாவோடே கூடப்போவேன்
ஆற்றுநீரைப் பாய்ச்சுவேன்
மாமாவோடே கூடப்போவேன்
மாடுகன்று கட்டுவேன்.

கன்னார் வேலை செய்வேன் - கூடக்
கணிதங்கொஞ்சம் பயிலுவேன்
மன்னார்சாமி வீட்டில் - சட்டிப்
பானை செய்யப் பழகுவேன்.

தாமோதரன் வீடு சென்று
தையல்வேலை பழகுவேன்
சாமண்ணாவின் இன்ஸ்டிடியூட்டில்
'டைப்' அடிக்கப் பழகுவேன்.

பாதிநேரப் பள்ளிக்கூடம்
படித்தநேரம் வீட்டிலே
சாதிபேதமில்லாமலே
சகலதொழிலும் கற்கலாம்.

வண்ணார் வீட்டுப்பிள்ளை வீணை
இசை முழக்கப் பயிலலாம்
வைணிகரின் பிள்ளைகளும்
வேஷ்டி துவைக்கப் பயிலலாம்.

சூது வாதில்லாத தொழில்
சொந்தமாகப் பயிலலாம்
சோற்றுக் கவலையில்லாமலே
தேசத்தொண்டும் செய்யலாம்.

நாட்டுக்கொரு தவப்புதல்வர்
நம் ராஜாஜி திட்டத்தால்
ஊருக்கெல்லாம் நல்லவனாய்
உழைப்பினாலே உயருவேன்!"



# மகா கும்பாபிஷேகம்

ஜூலை மாதம் 3ஆ வெள்ளிக் கிழமையன்று பொள்ளாச்சி நகரில் ஜனங்கள் ஜே! ஜே! என்று கூடியிருந்தனர். அவர்கள் உள்ளங்களில் பக்தி நிறைந்து பொங்கி வழிந்தது. அன்று பொள்ளாச்சியில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மாரியம்மனின் திருக் கோயிலுக்கு மகா கும்பாபிஷேகம் நடந்தது. இந்த வைபவத்தில் கலந்து கொள்வதற்காகச் சென்னை மாகாணத்தின் பல பகுதிகளிலிருந்தும் ஏராளமான பிரமுகர்களும் ஆஸ்திகர்களும் பக்திமான்களும் திரண்டு வந்திருந்தனர்.

ஆனைமலை பஸ் டிரான்ஸ்போர்ட் ஜெனரல் மானேஜர் ஸ்ரீ பி. நாச்சிமுத்துக் கவுண்டரைத் தலைவராகவும் ஸ்ரீ என். பழனியப்பக் கவுண்டரைப் பொக்கிஷதாரராகவும் மற்றும் பல பிரமுகர்களை அங்கத்தினர்களாகவும் கொண்ட கமிட்டியின் பெரு முயற்சியால் பல ஆஸ்திக அன்பர்களின் பேருதவியைக் கொண்டு மேற்படி கோயிலின் திருப்பணி நடந்து முடிந்தது.

கடந்த ஓராண்டுக்குள் மாரியம்மன் கோயிலின் கர்ப்பக் கிரஹம், அர்த்த மண்டபம், திவ்விய கோபுரம் முதலியவைகளைச் செப்பனிட்டு மகா கும்பாபிஷேகம் நடத்தப்பட்டது.

கும்பாபிஷேகத்தன்று இரவு மாரியம்மன் திருவீதி உலாக் காட்சி கண்கொள்ளாத காட்சியாக இருந்தது.

கும்பாபிஷேகத்துக்கு முதல் நாள் ஸ்ரீஜத் சுவாமி சித்பவானந்தா அவர்களின் உபந்யாசம் நடைபெற்றது. இந்த வைபவத்துக்கு அறநிலையப் பாதுகாப்பு மந்திரி ஸ்ரீ வெங்கடசாமி நாயுடு தலைமை வகித்தார். ஸ்ரீ மகாலிங்கம் எம். எல். ஏ. வரவேற்புரை வாசித்தளித்தார். பொள்ளாச்சி நகரசபை முன்னாள் தலைவர் ஸ்ரீ சேதுராம சாமிக் கவுண்டர் வந்தனோபசாரம் கூறினார்.

கும்பாபிஷேக வைபவத்தை முன்னிட்டு ஸ்ரீ முருகதாஸ் அவர்களின் பஜனையும், ஸ்ரீ தண்டபாணி தேசிகர், ஸ்ரீ மாரியப்ப சுவாமிகளின் இன்னிசைக் கச்சேரிகளும், ஸ்ரீ வீருசாமிப் பிள்ளை அவர்களின் நாதஸ்வரக் கச்சேரியும் நடைபெற்றன.

கும்பாபிஷேக வைபவத்துக்கு முன் சுமார் பத்தாயிரம் ஏழை மக்களுக்கு அறுசுவை உண்டியுடன் அன்னதானம் அளிக்கப்பட்டது.

இவ்விதமாக, தமிழ் நாட்டில் ஆஸ்திகமும் பக்தியும் பெருகுவதன் மூலம், அன்னதானத் திருப்பணியும் பரவி வருவது குறித்து மிக்க மகிழ்ச்சி அடைகிறோம்.




1 மகா கும்பாபிஷேகம் நடந்த பொன்னாச்சி ஸ்ரீ மாரியம்மன் கோவிலின் முன்கோபுரம். (காந்தி மகான் சிலையைக் கவனிக்கவும்.) 2. கோபுர கலசங்களுக்குத் தீப ஆராதனை. 3. சுவாமி சித்பவானந்தா அவர்களை உபந்யாசத்துக்கு ஊர்வலமாக அழைத்துச் செல்கிறார்கள். 4 சுவாமிகளுக்கு திரு என். மகாலிங்கம் எம்.எல்.ஏ. அவர்கள் மாலை சூட்டுகிறார். 5. பக்தர்களின் பரவசம். 6. கும்பாபிஷேக கோபுரம்.



1. கும்பாபிஷேக தீர்த்த கலசம் வருகிறது. 2. அற நிலையப் பாதுகாப்பு மந்திரி திரு. வெங்கடசாமி நாயுடுவும் பிரமுகர்களும் அம்மன் சந்நிதிக்கு வருகிறார்கள். 3. மகா கும்பாபிஷேகம் நடைபெறுகிறது. 4. அபிஷேக தரிசனத்துக்காகக் காத்துக் கொண்டிருக்கும் மக்கள் கூட்டம். 5. புதிதாகப் புனருத்தாரணம் செய்த அம்மன் சந்நிதி. 6. அம்மன் கோயிலில் எழுந்தருளியுள்ள விநாயகருக்கு அபிஷேகம்.









★ ★ ★

1. சுமார் பத்தாயிரம் ஏழைகளுக்கு வடை பாயசத்துடன் விருந்து அளிக்கப்பட்டது.

2. சுவாமி சித்பவானந்தா அவர்களின் உபந்யாசத்தைப் பக்தியுடன் கேட்ட மாதர்கூட்டத்தின் ஒரு பகுதி.

3. கும்பாபிஷேகம் முடிந்த பிறகு திரு நாச்சிமுத்துக் கவுண்டருக்கு மாலை மரியாதை நடைபெற்றது.

4. கும்பாபிஷேககர்த்தாவான திரு நாச்சிமுத்துக் கவுண்டர் தாமே பரிமாறும் தொண்டும் செய்து மகிழ்ந்தார்.

★ ★ ★

போட்டோ: எம்.டி. கிருஷ்ணய்

# நியாயத்தின் அடிமை

### கோமதி சுப்ரமணியம்

முதலாளியின் கார் தன் வீட்டு வாசலில் வந்து நின்ற போது நிலைகுலைந்து விட்டான் ராகவன். கார் வரும் என்று அவன் எதிர்பார்த்தது தான். ஆனால் இத்தனை சீக்கிரத்தில் அல்ல. என்றோ எப்பொழுதோ என்று நினைத்திருந்த காரியம், இப்பொழுதே நிகழ்ந்து விட்டதில் அவனுக்குப் பெரும் அதிர்ச்சி. அந்த அதிர்ச்சியில் வந்தவருக்கு மரியாதை செய்வதைக் கூட மறந்து நின்று விட்டான் சிலையாக.

"என்னப்பா ராகவா! வீடு தேடி வந்தவனை 'வா'வென்று கூடச் சொல்லாமல் அப்படி என்ன பலமான யோசனை!" என்று கேட்டபடியே அவர் வீட்டினுள் நுழைந்தார் தடதடவென்று.

அவருக்குத் தெரியும் காரியம் ஆக வேண்டுமானால் யாரை, எப்போது, எப்படிக் காக்காய் பிடித்தால் முடியும் என்பது.

"யோசனை ஒன்றுமில்லை. ஒரு வார்த்தை சொல்லி அனுப்பினால் நான் ஓடி வந்திருக்க மாட்டேனா! இதற்காக நீங்கள் இத்தனை சிரமப் பட்டிருக்க வேண்டுமா என்கிற சிந்தனையில் என்னை மறந்து விட்டேன்" என்று கூறி அவருக்கு உட்கார ஆசனம் அளித்தான்.

"சிரமம் ஒன்றுமில்லை, ராகவன். வக்கீல் வீடு வரை ஒரு காரியமாகச் சென்றேன். அப்படியே உன்னையும் பார்த்து விட்டுப் போகலாமென்று வந்தேன். அப்புறமென்ன ... நான் சொன்னது, அது விஷயமாக என்ன யோசனை செய்திருக்கிறாய்!" என்று மூடு மந்திரமாக ஏதோ கேட்டார்.

"திடுதிப்பென்று கேட்டால் என்ன பதில் சொல்வேன். யோசிக்க எனக்கு அவகாசம் கொடுங்கள் ......" என்றான் ராகவன்.

"இதில் யோசனைக்கு இடமே யில்லை. என் போக்கின்படி நடப்பதானால் நம் இருவருக்குமே நன்மை என்பதை நான் சொல்ல வேண்டியதே யில்லை" என்று கூறி ஒரு மாதிரியாகப் பார்த்தார். 'என் சொல்லுக்கு எதிராக நடப்பதாக இருந்தால் என்ன நடக்கும் என்பதையும் உணர்ந்துக் கொள்' என்று எச்சரிக்கை செய்வதுபோலிருந்தது அப்போது அவர் பார்த்த பார்வை.

"எஜமான், என் நிலை எனக்கே புரியாத நிலையிலிருக்கிறேன். தயவு செய்து இன்னும் ஒரு வாரம் அவகாசம் கொடுங்கள்" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டதின் பேரில் அவ்விடம் விட்டு அகன்றார் நாராயண பிள்ளை.

ராகவன் வேலை பார்த்து வந்த கிடங்கியின் முதலாளி சுந்தரம் பிள்ளை இறந்த உடனேயே, ராகவன் வேலையினின்று நின்று விடுவான் என்று தான் பலரும் எதிர்பார்த்திருப்பார்கள். அவனும் அப்படித்தான் நினைத்துக் கொண்டிருந்தான். ஆனால் அப்படி நடக்க விடாதபடி சுந்தரம் பிள்ளை சாகுந் தருணம் பெரிய பொறுப்பொன்றை அவன் தலையில் சுமத்திவிட்டுச் சென்றிருந்தார்.

சுந்தரம் பிள்ளை எந்த விஷயத்திலுமே மிகவும் அடக்கமான பேர்வழி. தன் வரவுசெலவுக் கணக்குகளைப் பெரும்பாலான முறையில் பிறர் அறிந்து கொள்ளா வண்ணமே நடத்திக் கொள்வார். பெற்ற பிள்ளைக்கும் கட்டிய மனைவிக்கும் கூடத் தெரியாது அவர் யாருக்கு என்ன கொடுக்க வேண்டும்; யார் யாரிடமிருந்து அவருக்கு என்ன வரவேண்டும் என்பவை.

குழந்தை முதலே தன்னிடம் அடைக்கலமாகி விட்ட ராகவனைத் தம் அந்தரங்கக் காரியதரிசியாக அமர்த்திக் கொண்டார் சுந்தரம் பிள்ளை. அவர்கள் இருவரைத் தவிர யாருக்குமே எந்த வரவு செலவும் தெரிந்திருக்க நியாயமில்லை.

சாதாரண சுரமாகப் படுத்தவர் ஒரு வாரத்திற்குள் இளைத்துத் துரும்பாகிப் பார்க்க விளங்காது போய் விட்டார். பல வைத்தியர்கள் வந்து பார்த்தும் அவர் நிலையில் மாறுதலைக் காணாது மனம் வருந்தினர் மனைவி மக்கள். தமக்கு அந்திய காலம் நெருங்கி விட்ட தென்பதை அவர் உணர்ந்து கொண்டு விட்டார். சுய நினைவு தப்பிப் போவதற்கு முன்பாக ஒரு நாள் ராகவன் அவரைப் பார்த்துப் போவதற்காக வந்திருந்தான்.

அவன் எப்பொழுது வந்தாலும் அவனை வெகு நேரம் தன்னிடம் தங்க வைக்க மாட்டார். "என்னை வீட்டிலிருப்பவர்கள் கவனித்துக் கொள்வார்கள், ராகவா. நீ கடையைக் கவனித்துக் கொள்ளப் போ" என்று சொல்லி அனுப்பி விடுவார் அவர்.

அன்று ராகவன் வந்ததும் அவனைத் தம் பக்கத்தில் இருக்கச் சொல்லி ஜாடை காட்டினார்.

அவர் சைகையைப் புரிந்து கொண்ட ராகவன் பணிவுடன் அவர் கட்டிலினருகில் மண்டியிட்டு உட்கார்ந்தான். தட்டுத் தடுமாறி அவன் கரத்தைப் பற்றிக் கொண்ட சுந்தரம் பிள்ளை "ராகவா ......எனக்கு வயதாகி விட்டது......வாழ்க்கை முடிந்துவிட்டது. உன்னிடம் பெரிய பொறுப்பைச் சுமத்திச் செல்லுகிறேன். எந்தக் காரணத்தைக் கொண்டும் கணக்கு வழக்குகளை என் தம்பியிடம் காட்டிவிடாதே. அடுத்த வருஷம் என் மகன் ராஜலிங்கம் மைனர் நீங்கியதும், அவனிடம் பொறுப்புகளை ஒப்புவித்தால் போதும். அதுவரை நீயே பொறுப்பாக வியாபாரத்தை..." மேலே பேச முடியாமல் வாய் குழறியது.

"உங்களிடம் தின்ற உப்புக்கு ஒரு நாளும் துரோகம் செய்ய மாட்டேன் எஜமான்" என்று அவன் கையடித்துக் கூறும் வரை காத்திருந்ததே போல் அவர் தலை 'தடக்'கென சாய்ந்தது.

* * *

அண்ணன் உயிருடன் இருந்த போதே அவரது கிடங்கியில் ஒரு கண் வைத்திருந்த நாராயண பிள்ளை அவர் மறைவுக்குப் பின் எவ்வித தங்கு தடையுமின்றி முதலாளி ஸ்தானத்தில் வந்து உட்கார்ந்து கொண்டார்.

அவர் முதலாளி ஸ்தானத்தில் அமர்ந்ததும் முதல் வேலையாக ராகவனின் மீதுதான் அவர் கண்ணை வீசினார். இன்ன தூண்டில் போட்டால் இன்ன மீன் சிக்கும் என்கிற ரகஸ்யம் அவருக்குத் தெரியும். ராகவனை மெதுவாகத் தம் வலையில் போட்டுக் கொண்டால் பெருவாரியான கணக்குகளை ராஜலிங்கம் அறிய முடியாமலே அமுக்கி விடலாம். தனக்குக் கிடைக்கும் பெருந் தொகையில் ஒரு சிறிது ராகவனுக்கும் கொடுத்துவிடலாம் என்று உத்தேசித்தார். அதற்கு அவன் உட்பட வேண்டுமே. நயத்தால் கேட்டுப் பார்க்க வேண்டியது முதலில். வழிக்குத் திரும்பா விட்டாலோ பயமுறுத்தித் திருப்ப வேண்டியதுதான் என்ற முடிவுக்கும் வந்திருந்தார் நாராயண பிள்ளை.





ராகவனைத் தனிமையில் சந்தித்துத் தம் அபிப்பிராயத்தைத் தெரிவித்தபோது ராகவன் தீயை மிதித்தவனைப் போல் திடுக்கிட்டான். எஜமானத் துரோகம் என்பதை நினைக்கவே அவன் நெஞ்சம் பதறியது. அவனது உள்ளத்தைக் குறிப்பால் உணர்ந்து கொண்ட நாராயண பிள்ளை சந்தர்ப்பத்திற்குத் தகுந்த பேச்சை விடுத்து அவன் மனச் சாட்சியை விரட்டுவதற்கு முயற்சித்தார்.

"என்னப்பா, ராகவா! விழிக்கிறாய்! எஜமானனுக்குத் துரோகம் செய்வதா என்றுதானே விழிக்கிறாய்! வாஸ்தவம், ஒப்புக் கொள்கிறேன். ஆனால் காலமெல்லாம் உன் எஜமானனுக்காக ஓடி ஓடி உழைத்தாயே, உன் உண்மை உழைப்புக்குப் பரிசாகச் சம்பளம் தவிர இதுவரை ஏதாவது கொடுத்திருக்கிறாரா! அவரிடமிருந்து நீ வாங்கியிருக்கிறாயா! உன்னால் அவர் அடைந்த லாபங்கள் எத்தனை லட்சம்! நினைத்தால் அவற்றில் ஒரு துளியைப் பரிசாக அளித்து உன்னை உய்வித்திருக்கக் கூடாதா......" என்றெல்லாம் கூறினார்.

நாராயண பிள்ளை பேசிய விதம், அவர் கேள்வி நியாயமானது என்று படும்படி இருந்தது. பேச்சின் மயக்கத்திலே ராகவன் ஒரு க்ஷணம் தன் நிலை இழந்து விட்டான். அப்படிப் பட்ட எஜமானன் பணத்தைக் கையாடுவதில் தயக்கம் ஏன் கொள்ள வேண்டும் என்று தோன்றியது.

சிறு குழந்தையாக இருந்தபோது அவரிடம் வந்து அண்டிய நாளிலிருந்து இன்று வரை தின்று வருவது அவர் உப்பு. அவனது கலியாணத்தை முடித்து வைத்தது அவர் பணம். மேலும் குடும்பத்தில் தட்டுப்பட்ட வேளை ஒன்றிரண்டு கொடுத்து பண உதவியும் செய்திருந்தார். நாராயண பிள்ளையின் கேள்வியைப் போல மொத்தத் தொகையாக அவரிடமிருந்து பெற்றுக் கொள்ளவில்லையே தவிர சில்லறையாகப் பெருவாரியாகக் கடன் பட்டிருந்தான் சுந்தரம் பிள்ளைக்கு. அந்தக் கடனுக்காகவாவது நேர்மையாக நடந்து கொள்ள வேண்டுமென்று அறிவுறுத்தியது மனச் சாட்சி. இந்த நிலையில்தான் நாராயண பிள்ளையிடம் தனக்கு ஒரு வாரம் அவகாசம் கேட்டிருந்தான் ராகவன்.

"நாராயண பிள்ளை தம் அறைக்கு உங்களை வரச் சொல்லுகிறார்" என்று பையன் வந்து சொன்ன போது பாதி உயிர் போய் விட்டது ராகவனுக்கு. 'இன்று அவரிடமிருந்து எப்படி தப்பப் போகிறோம்' என்கிற எண்ணத்துடனே அறைக்குள் நுழைந்தான்.

போனதும் அவன் எதிர் பார்த்த கேள்வியைக் கேட்டுத் திணற அடிக்காமல் பொது விஷயங்களில் பேச்சைத் திருப்பினார் நாராயண பிள்ளை.

"ராகவன்! வருஷ முடிவில் சிப்பந்திகளுக்குப் 'போனஸ்' கொடுக்கலாமெனத் தீர்மானித்திருக்கிறேன். அவரவர்கள் சம்பளத்திற்குத் தகுந்தபடி கணக்கெடுத்துக் கொண்டு வா!" என்று அவர் கூறி முடித்ததும் போன உயிர் திரும்பியதுபோலிருந்தது ராகவனுக்கு.

"சரி, சார்!" என்று கூறிவிட்டுப் போகத் திரும்பியபோது "இன்னொரு விஷயம் ராகவன், உன் வீடு ஏன் அப்படி இடிந்து கிடக்கிறது! கொஞ்சம் பணம் செலவு செய்து ரிப்பேர் செய்து கொள்ளக்கூடாது! அன்றைக்கு உன் வீட்டிற்கு வந்தபோதுதான் பார்க்க நேர்ந்தது. வரப் போவது மழைக் காலம். அதற்கு முன் செய்வதைச் செய்ய வேண்டாமா!" என்று மிகவும் பரிவோடு வினவினார்.

"செய்ய வேண்டும் சார்! கையில் பணமில்லை!"

"பணத்திற்காகத் தயங்குவானேன். வேண்டியதை வாங்கிக் கொள்வதுதானே! உனக்கில்லாத பணம் வேறு யாருக்காக!" என்று கூறியதைக் கேட்டு மயங்கி விட்டான் ராகவன்.

'நல்லது சார்!' என்று கூறி நின்றபோது, "நான் கேட்ட விஷயம் யோசித்தாயோ!" என்றார்.

அப்பொழுதுதான் விழித்துக் கொண்டான் ராகவன் — அவர் பரிவுக்குக் காரணம். அப்போதைக்கு அவரிடமிருந்து தப்பித்துக் கொண்டால் போதுமென்று நினைத்த ராகவன், "எனக்கு ஒரு வாரம் அவகாசம் வேண்டுமென்று கேட்டுக் கொண்டேனே" என்று தாழ்மையுடன் கூறி விட்டு அவ்விடம் விட்டகன்றான்.

"ஒரு வாரமென்ன, ஒரு மாதம் வேண்டுமானாலும் அவகாசம் எடுத்துக் கொள். பதில் மட்டும் சாதகமாகவே இருக்கட்டும்" என்று அவர் கூறிய தொனியில் அழுத்தம் நிறைந்திருந்ததோடு சற்று பயமுறுத்தலும் கலந்திருந்ததை ராகவன் உணராமலில்லை.

* * *

அவரது பயமுறுத்தலுக்காகவும் தன் சுயநலத்துக்காகவும் நாராயண பிள்ளையின் போக்குக்கு வளைந்து கொடுக்கத் தூண்டியது பேராசை.

சுந்தரம் பிள்ளையின் மரணத் தருவாயின் வேண்டுதலும் எஜமான விசுவாசமும் ஒரு காலும் துரோகம் நினைக்காதே என்று வற்புறுத்தியது. இரண்டிற்கும் நடுவிலகப்பட்டுத் தடுமாறினான். நாராயண பிள்ளையின் சொற்படி நடந்தால் அவனிடம் பணம் குவியும். அவன் செல்வத்தில் புரளலாம். வாட்டியெடுக்கும் வறுமையை உதறித் தள்ளிவிட்டுக் குபேர சம்பத்தில் புரளலாம். தன் அழகுப் பதுமை செல்லாயியைப் பாசியாலும் பவளத்தாலும் அழகு பார்க்க வேண்டியதில்லை. பொன்னாலும் மணியாலும் நகை செய்து அவள் மனத்தைக் குளிரச் செய்யலாம். பருத்தித் துணிக்கு ஏங்கி நிற்கும் அவளைப் பட்டால் அலங்கரிக்கலாம். இதெல்லாம் எதனால் ...?

எஜமானத் துரோகத்தினால்! சிந்தனை இழையோடியது.

அனாதைச் சிறுவனாக நின்ற தன்னைத் தன் கடைக்கு அழைத்து வந்து ஆறு ரூபாய் சம்பளத்தில் கடைப் பையனாக வைத்துக் கொண்டு வீட்டோடு வைத்துச் சாப்பாடு போட்டு வளர்த்தது யார்! ஆறு ரூபாய்ச் சம்பளத்தைத் திடீரென்று உயர்த்தினால் பிறரது பொறாமைக்கு ஆளாக நேருமென்று கொஞ்சம் கொஞ்சமாக உயர்த்தி அறுபது ரூபாயில் கொண்டு வந்திருந்தது யார்! சம்பளம் என்று பெயர் பொறிக்காமலே அவ்வப்போது ஐந்தும் பத்தும் கொடுத்துப் பணக்கஷ்டம் நேர்ந்த போதெல்லாம் உதவியது யார்!

மனைவியின் பிரசவ சமயம் கையில் பணமில்லாமல் தவித்தான். முதலாளியிடம் சொல்ல வெட்கப் பட்டுக்கொண்டு சொல்லாமலே இருந்து விட்டான். அவன் நினைத்ததைப் போல் சுகப் பிரசவமாக முடியாமல் வேதனை அதிகமாகி ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லும் நிலைமை நேர்ந்து விட்டது. அதற்காக முதலாளியிடம் லீவு கேட்க வந்தபோது அவர் கூறிய பதில், "அவஸ்தைப் படும் பெண்ணைத் தனிமையில் விட்டு விட்டு 'லீவு' கேட்க ஓடி வர வேண்டுமா! நாளை வந்து சொன்னால் போதாதா! தலை போய் விடுமா! ஆமாம், பணத்திற்கு என்ன செய்தாய்! உன்னிடம் பணம் இருக்காதே! ஆஸ்பத்திரிக்குப் போவதானாலும் கையில் பணமில்லாமல் முடியா தப்பா! சற்று இரு, வருகிறேன்" என்று கூறி விட்டு உள்ளே எழுந்து போனார்.

கல்லாப் பெட்டியைத் திறந்து ஐம்பது ரூபாயை எடுத்துக் கொண்டு வந்து கொடுத்த போது ஆச்சரியத்தால் ஸ்தம்பித்து விட்டான் ராகவன். ஏதோ ஐந்து பத்து கொடுப்பார் என்று எதிர்பார்த்த ராகவன் ஐம்பது ரூபாய் கிடைத்ததில் பெருமகிழ்ச்சி அடைந்தான்.

'நான் மிகவும் புண்ணியம் செய்தவன் எஜமான். உங்களைப் போன்ற முதலாளியைப் பார்க்கவே முடியாது. எத்தனை உண்மையாக உழைத்தாலும் ஊழியர்கள் லீவு கேட்டாலே கொடுக்க மறுப்பார்கள். தங்களது உத்தரவில்லாமலே தங்கிக் கொண்டாலென்ன என்று கேட்டதோடு நான் கேட்காதிருந்த போது பணம் கொடுக்க முன் வந்தீர்கள். தங்கள் பெருந் தன்மையை எப்படி எடுத்துக் கூறுவேன். இந்த நன்றியை என் ஆயுள் உள்ளவரை மறக்க மாட்டேன்" என்று உணர்ச்சிப் பெருக்கோடு கூறி விட்டு ஆஸ்பத்திரிக்கு ஓடினான்.

'அப்படிப் பேசியவனா இன்று துரோகம் செய்யத் துணிந்து விட்டாய்! அட, நன்றிகெட்டவனே!' என்று இடித்துக் கூறியது மனச் சாட்சி. இது மட்டுமா! இன்னும் இது போல் எத்தனையோ சம்பவங்கள் அவனது வாழ்வில்.

மேலும் நம்பிக்கைத் துரோகம் செய்ய மாட்டான் என்ற அசையாத நம்பிக்கையின் பேரில் தானே கடைசி வரை தன்னிடமே அவர் பொறுப்பைச் சுமத்திவிட்டுக் கண்ணை மூடினார்!

"உங்களுக்குத் துரோகம் செய்ய மாட்டேன்" என்ற பதிலைக் கேட்டு அவர் முகம் எத்தனை சாந்தி அடைந்தது. மரணத்தின் வாசலிலே நம்பிக்கையை மூட்டி விட்டு இன்று துரோகம் நினைப்பதானால் தனக்கு நல்ல கதி கிடைக்குமா என்று நினைத்துக் கலங்கினான்.

நாராயண பிள்ளையின் பேச்சுக்கு மயங்கி அவர் போக்குப்படி நடந்தால் தனக்கு நல்ல வாழ்வே கிடையாது என்று திண்ணமாகப் பட்டது. ஆனால் அவருக்கு எதிராக நடந்தாலோ அவன் அந்த ஊரிலேயே தலைகாட்டவும் முடியாது. இதற்கு வழிதான் என்ன! குறுக்குவழி ஒன்று தான் பட்டது. நாராயணபிள்ளையின் கண்ணுக்கு மறைவாக இந்த ஊரைவிட்டே ஓடிவிட வேண்டியதுதான் ......

பிறந்தது முதல் வளர்ந்து விட்ட அந்த ஊரை விட்டு எங்கு போவது! என்ன வேலை தேடுவது! மனைவியும் அவனும் வயிறு வளர்ப்பது எப்படி! என்றெல்லாம் பலப் பல பிரச்னைகள் அவன் கண் முன்னே நீண்டு விரிந்தன.



கடைசியில் 'எது வந்தாலும் வரட்டும்' என்று தீர்மானமான முடிவுக்கு வந்தான்.

ராஜலிங்கம், சிறு பையன். உலகம் தெரியாதவன். அவனை வளர்த்த சுந்தரம் பிள்ளை, தன் கடையின் விஷயமாக எதையுமே அவனுக்குக் கூறாமல் பரம ரகசியமாக வைத்திருந்தார். ஆகவே, அவன் ஒன்றுமே அறியாதவனாக இருந்தான். வேளா வேளைக்குக் காப்பி சாப்பிடுவதும்; டிபன் சாப்பிடுவதும், ஊர் சுற்றுவதும்; சினிமாக்களுக்குப் போவதுமாகப் பொழுதைப் போக்கி வந்தான். இப்படி யிருந்தபோது, ஒரு நாள் மத்தியானம், மைனர் ராஜலிங்கம் காப்பி அருந்தி விட்டு முன் வாசலுக்கு வந்தான். அப்போது தபால்காரர் அவனைத் தேடி வந்து ஒரு ரிஜிஸ்தர் தபாலைக் கொடுத்து விட்டுச் சென்றார். கையெழுத்திட்டு வாங்கிப் பிரித்த ராஜலிங்கம் அப்படியே கல்லாய்ச் சமைந்து விட்டான்.

அவன் தந்தையின் வரவு செலவுக் கணக்குகள் அக் கவருக்குள் அடங்கி யிருந்ததோடு சிறிய துண்டுக்கடிதமும் அதனுடன் ஒட்டிக்கொண்டிருந்தது.

அன்பார்ந்த ஐயா,

உங்கள் தந்தையின் உப்பும் தண்ணீரும் எனக்கு இது நாள் வரைதான் கொடுத்து வைத்திருந்தது. தந்தைக்குப் பின்னும் உமக்காகவும் உழைக்க வேண்டுமென்பதுதான் என் பேராவல். ஆனால் எனது போதாத காலமும் சூழ்நிலையும் சரியாக இல்லாததால் ஊரைவிட்டே ஓடவேண்டியிருக்கிறது. எங்கே போகிறேன், எதற்காகப் போகிறேன் என்று மட்டும் கேட்காதீர்கள். என் நேர்மை எனக்குச் சோறு போடும் என்ற நம்பிக்கையுடனே புறப்பட்டு வந்து விட்டேன். கடைசியாக ஒரு எச்சரிக்கை. தங்கள் சிற்றப்பா நாராயண பிள்ளையிடம் சர்வ ஜாக்கிரதையாக நடந்து கொள்ளுங்கள். அவர் உங்களைக் கவிழ்க்கும் சந்தர்ப்பத்திற்காகக் காத்துக் கொண்டிருக்கிறார். இன்னும் ஒரு வருஷம் மைனர் நீங்கும் வரை எப்படியோ பிடி கொடுக்காமல் சமாளித்து விட்டால் அதன் பின்பு உங்களை ஒருவராலும் அசைக்க முடியாது. கடவுள் துணை செய்வார்.

இப்படிக்கு, உண்மை ஊழியன்,

ராகவன்.

அவன் கையிலிருந்த அந்தக் கடிதம் அப்போதைய அவனது நிலையைப் படம் பிடித்துக் காட்டிற்று. இதுவரை குழந்தை போல் பொறுப்பற்றிருந்த அவன் ராகவன் அனுப்பிய கடிதத்தினால் விழித்துக் கொண்டான். கடிதத்தைத் திருப்பித் திருப்பிப் படித்து அவனிருக்குமிடத்தை அறிய விரும்பினான் ராஜலிங்கம். அறியாத ஊரில் அவதிப்படக் கூடாதென்பதற்காக ஆள்விட்டுப் பல இடங்களிலும் தேடினான். தக்க சமயத்தில் தனக்கு எச்சரிக்கை விடுத்த அந்த உத்தமன் அவதிப்பட வேண்டாமென்று ஆன மட்டும் முயற்சி எடுத்துத் தேடினான்; அகப்படவேயில்லை.

ராகவனின் எச்சரிக்கையின் மூலம், வர இருந்த பல இன்னல்களையும் சமாளித்து, மைனர் நீங்கியதும் கடையின் நிர்வாகம் முழுமையும் தானே ஏற்றுக் கொண்டு நிம்மதியாக வாழ்வு நடத்தும் ராஜலிங்கம் இப்பொழுதெல்லாம் ராகவனை நினைத்துக் கொள்ளாத நாளே கிடையாது.

## அகில உலகச் சிறு கதைப் போட்டி

- இரண்டாவது தடவையாக நடைபெறும் அகில உலகச் சிறு கதைப் போட்டிக்குக் கதை அனுப்புவோர் ஜூலை மாதம் முப்பத்தொன்றும் தேதிக்குள் அனுப்ப வேண்டும்.
- சகல எழுத்தாளர்களுக்கும் அதிக அவகாசம் அளிக்க வேண்டும் என்பதற்காகவே முடிவு தேதியை ஜூன் 30–லிருந்து ஜூலை 31ந் தேதிக்கு ஒத்திவைத்திருக்கிறார்கள்.
- இந்தியாவில் தமிழ் உள்பட முக்கியமான பன்னிரண்டு பாஷைகளிலாவது, ஆங்கிலத்திலாவது மேற்படி போட்டிக்குச் சிறு கதை எழுதலாம்.
- இந்தியாவில் எழுதப்படும் சிறந்த எட்டுக் கதைகளுக்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை மொத்தம் ரூ. 5,250 பரிசு அளிக்கும். அதில் முதல் பரிசு ரூ. 1,500.
- அந்த எட்டுக் கதைகளிலிருந்து அகில உலகச் சிறு கதைப் போட்டிக்காக நாலு கதைகளைத் தேர்ந்தெடுத்து அனுப்புவார்கள்.
- இதில் கலந்துகொள்ளும் பத்திரிகைகள் தங்கள் தங்கள் பாஷைக் கதைகளுக்குப் பரிசு அளிக்கும்.
- பரிசு பெறும் சகல கதைகளும் போட்டியை நடத்தும் பத்திரிகைகளில் வெளிவரும்.
- கதைகள் பிரசுரமாகி முடிந்த பின், அந்தக் கதைகளில் எது சிறந்தது என்பதை, போட்டியை நடத்தும் பத்திரிகைகளிடையே வோட்டு எடுத்து முடிவு செய்வார்கள்.
- அந்தக் கதைக்கே அகில உலகச் சிறு கதைப் போட்டியான ஐயாயிரம் டாலர் (ரூ. 23,750) கொடுக்கப்படும்.
- தமிழ்க் கதைகளை ஆசிரியர், "கல்கி", மீம்பாக்கம், சென்னை-10 என்ற விலாசத்துக்கு அனுப்பி வைக்க வேண்டும்.
- சிறு கதை அனுப்புவோர், அது தங்களுடைய சொந்தக் கற்பனையைக் கொண்டு எழுதப்பட்டது என்று உறுதி கூறவேண்டும். ஏற்கெனவே எந்த இடத்திலும் பிரசுரிக்கப்பட்டதல்ல என்று உத்தரவாதம் அளிக்க வேண்டும்.
- தயவு செய்து உறையின் மேல் "அகில உலகச் சிறு கதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டுகிறோம்.
- அகில உலகச் சிறு கதைப் போட்டிக்குப் பொறுக்கி எடுக்கப்படும் நாலு தமிழ்க் கதைகள் ஒவ்வொன்றுக்கும் ரூ. 125 வீதம் சன்மானம் அளிக்கப்படும்.




## 1. இங்கிருந்தவன் எங்கே?

○●○

பிரபாவுக்குப் பூ என்றால் ரொம்பப் பிரியம். ரோஜாப் பூவின் மணத்திலும், நிறத்திலும் அவளுக்கு அளவு கடந்த ஈடுபாடு. வைத்த கண் வாங்கமாட்டாள்.

மல்லிகைப் பூவின் வெண்ணிறத்திலும் சுகந்தத்திலும் அப்படியே சொக்கிப் போவாள்.

செம்பருத்திப் பூவின் கண்ணைப் பறிக்கும் சிவப்பு நிறத்துக்காகத் தன் உயிரையே கொடுத்து விடலாமா என்று தோன்றும்.

அதுமட்டுமல்ல, அவளுடன் கூட வரும் வேலைக்காரர்களிட மெல்லாம், "இந்த ரோஜாவில் இந்த வாசனை யார் கொண்டு வந்து வைத்தார்கள்? இத்தனை அடுக்கு இதழ்கள் வைத்துக் கட்டினது யார்? இந்தச் செம்பருத்திப் பூவுக்கு இந்தச் சிவப்பு நிறத்தைப் பூசினது யார்? செவ்வந்திப் பூவில் மஞ்சள் நிறத்தைத் தடவியது யார்?" இப்படி நூற்றுக் கணக்கான கேள்விகள் கேட்டுத் தொந்தரவு செய்து விடுவாள். அந்த வேலைக்காரர்களுக்கு இந்தக் கேள்விகளுக் கெல்லாம் பதில் சொல்லவா தெரியும்? "ராஜகுமாரி, நீங்கள் இந்தமாதிரி யெல்லாம் கேட்கக் கூடாது. ராஜகுமாரியாக இருக்கிறவர் இப்படிப்பட்ட அசட்டுக் கேள்விகள் கேட்கக் கூடாது!" என்று பயமுறுத்தி நிறுத்தி விடுவார்கள்.

இப்படி ஒரு தடவையா, இரண்டு தடவையா, எத்தனையோ தடவைகள் ஆகிவிட்டன. இளவரசி பிரபா, "நான் ராஜகுமாரியாக இருந்தால் என்ன? இவற்றை யெல்லாம் பற்றித் தெரிந்து கொள்ள எனக்கு உரிமை யில்லையா? தெரிந்து கொள்வது பாவமா?" என் றெல்லாம் நினைத்துக் கொள்வாள்.

ஒரு நாள், ராஜகுமாரி பிரபா தோட்டத்தில் விளையாட ஒரு புது வேலைக்காரன் அழைத்துப் போனான். அவன் மீசை, கண்கள், முக ஜாடை இவற்றையெல்லாம் பார்க்க ரொம்பக் கொடியவன், கெட்ட சுபாவம் உள்ளவன்போல் பிரபாவுக்குத் தோன்றியது. ஆனால் அவன் பேச்சு, குரல் எல்லாம் ரொம்ப இனிமையாக இருந்தன. இதைப் பார்த்த குழந்தை பிரபாவுக்கு-எட்டு வயது நிரம்பிய ராஜகுமாரி பிரபாவுக்கு ஆச்சரியமாக இருந்தது. இத்தனை நாள் வந்த சேவகர்கள் முகபாவம் எப்படியிருந்ததோ அப்படியேதான் அவர்கள் பேச்சும் இருந்தது; பேச்சு எப்படியிருந்ததோ அப்படியேதான் முகபாவமும் இருந்தது. ஆனால் இவனுக்கு மட்டும் முகம் கடுமையாகவும், குரல் இனிமையாகவும் இருக்கக் காரணம் என்ன என்று வெகு நேரம் எண்ணி எண்ணி ஆச்சரியப்பட்டாள்.

இந்த அதிசயத்தில் மூழ்கிய பிரபாவிற்கு, வழக்கம்போல் அவள் அதிசயப்படும் விஷயங்களில் அதிசயப் படவில்லை. அவளுக்கு ரோஜாவின் நிறத்தைப் பற்றிக் கேட்கத் தோன்றவில்லை; மல்லிகையின் மணத்தைப் பற்றிக் கேட்கத் தோன்றவில்லை. அவனையே அகல விரித்த கண்களுடன் பார்த்துக் கொண்டிருந்தாள்.

ராஜகுமாரி பிரபா தன்னையே உற்றுக் கவனிப்பதைப் பார்த்த அந்தப் புதுச் சேவகன், ராஜகுமாரி கவனத்தைத் திருப்ப என்ன செய்யலாம் என்று யோசித்தான்.

அந்தச் சமயம் கண் எதிரில் தாமரைக் குளம் ஒன்று அங்கிருப்பது அவன் கண்ணில் பட்டது. அந்த அரண்மனைக் குளத்தில் நூற்றுக்கணக்கான தாமரை மலர்கள் முகை விரித்துக் கொண்டிருந்தன. ஏனெனில் அப்போதுதான் கீழ்த் திசையின் அடிவானத்தில் சூரியன் உதயமாகிக் கொண்டிருந்தான். சூரியனைக் கண்டல்லவோ தாமரை மலர்கள் மலரும்.

தாமரைத் தடாகத்தைக் கண்டதும், புதுச் சேவகன் "ராஜகுமாரி! இந்தத் தடாகத்தில் எத்தனை அழகான தாமரை மலர்கள் பார்த்தாயா?" என்றான்.

"ஆமாம்; எவ்வளவோ அழகாக இருக்கின்றன. இவற்றை யெல்லாம் யார்தான் செய்கிறார்களோ? எப்படித்தான் அனுப்புகிறார்களோ?" என்று கேட்டு ஒரே அடியாய் ஆச்சரியத்தில் வழக்கம் போல் மூழ்கிவிட்டாள் இளவரசி பிரபா.

அந்தப் புதுச் சேவகன், ராஜகுமாரியின் கவனத்தைத் திருப்ப இதுதான் சமயம்

என்று அறிந்தான். "இது தெரியாதா, ராஜகுமாரி உங்களுக்கு?" என்றான்.

"தெரியாதே, உனக்குத் தெரியுமோ?" என்றாள்.

"ஓ, தெரியுமே! சொல்லட்டுமா?"

"ஓ, சொல்!" என்றாள் ராஜகுமாரி பிரபா குரலில் ஆவல் தொனிக்க.

"இராத்திரியிலே வானத்தில் நட்சத்திரங்கள் மினுக் மினுக்கென்று தெரிகின்றன அல்லவா? அதற்கு நட்சத்திர மண்டலம் என்று பெயர். அந்த மண்டலத்துக்கும் மேலே, ஓர் உலகம் இருக்கிறது. அதற்குத் தேவலோகம் என்று பெயர். அந்த தேவலோகத்தில் கமல குமாரி என்றோர் தேவகன்னிகை யிருக்கிறாள். அவள் என்றைக்கோ ஒரு காலத்தில் இந்தத் தாமரைப் புஷ்பம் போல் செய்து, வாசனையும் வைத்து அழகு பார்த்தாள். முதலில் அவளுக்கு ரொம்பப் பிடித்திருந்தது. தான் செய்த தாமரை புஷ்பத்தில் தானே மயங்கி விட்டாள். பிறகு கொஞ்ச நாள் ஆக, ஆக அந்தத் தாமரைப் புஷ்பம் பிடிக்காமற் போய்விட்டது. அந்தப் புஷ்பத்தை அப்படியே எடுத்துக் கசக்கினாள். அதை உருண்டையாகச் செய்தாள். அது ஒரு சுண்டைக்காயளவுள்ள உருண்டையாயிற்று. கடைசியில் தன் ஆத்திரமெல்லாம் தீர விட்டு எறிந்தாள். அது தேவலோகத்தை விட்டு, நட்சத்திர மண்டலத்தைத் தாண்டி, பூவுலகத்தில் வந்து, இந்தத் தடாகத்தில் விழுந்தது. தடாகத்தில் சேறும் ஜலமும் நிறைய யிருந்தது. உடனே, அந்த வித்து முளைத்தது. கமலகுமாரி செய்த தாமரையைப் போலவே, ஒரு மலர் உண்டாயிற்று. தேவலோகத்திலிருந்து பார்த்த கமல குமாரிக்குக் கோபம் கோபமாக வந்தது. தன்னைக் கேலி செய்யவே, அந்த உருண்டை அப்படியே மலராக மலர்ந்திருக்கிறது என்று நினைத்து ஆத்திரம் கொண்டாள் தேவகன்னிகை. அது மட்டுமல்ல, அந்தத் தாமரையில், கமலகுமாரி எறிந்த உருண்டையைப் போலவே இருபது முப்பது தாமரை மணிகள் உண்டாயின. கொஞ்ச நாட்களில் அந்தத் தாமரை மலர் வெய்யில் தாங்காமல் வாடி வதங்கி அழிந்து போயிற்று! அதைப் பார்த்த பிறகுதான் கமலகுமாரிக்கு மனசு சாந்தியடைந்தது.

கமலகுமாரியின் மனத்தில் அதிக நாள் நிம்மதி இருக்க முடியவில்லை. ஏனெனில் சில நாட்களிலேயே, அந்தத் தடாகத்தில் நூற்றுக் கணக்கான தாமரை மலர்கள் அழகாக மலர்ந்து தோன்றின. இதைக் கண்ட கமலகுமாரிக்கு ஆத்திரம் இன்னும் அதிகமாயிற்று. 'ஒன்றுக்குப் பதில் நூறு புஷ்பங்கள் தோன்றி நம்மைக் கேலி செய்கின்றன. பார்த்தாயா' என்று கோபங் கொண்டாள். ஆனால், அவள் கோபம்

பூவுலகத்திலிருந்த தாமரையை ஒன்றும் செய்ய முடியவில்லை. செல்லாத கோபத்தை எத்தனை நாள் மனசுக்குள் வைத்துக் கொண்டு தவிப்பது? செல்லாத காசு நம்மிடம் வந்து விட்டால், அதை எங்கேயாகிலும் பெட்டி மூலையில் போட்டு வைக்கிறோம்; அல்லது எறிந்து விடுகிறோம் அல்லவா? அதே போலக் கமல குமாரியும் தன் கோபத்தை மனசின் ஒரு மூலையில் கட்டிச் சுருட்டி வைத்து விட்டாள்.



நாற்றுக் கணக்கில் பூத்து விளங்கிய தாமரைகளைக் கண்ட உலக மக்கள் அப்படியே சொக்கிப் போயினர். 'ஆகா! எவ்வளவு அழகாக யிருக்கிறது! என்ன வாசனை! புஷ்பங்களுக்குள் எல்லாம் இதைத்தான் ராணி என்று சொல்ல வேண்டும்' என்று வியந்து பாராட்டினர்.

இந்த மனிதர்களில் கவி என்று ஒருவன் வந்தான். அவன் லக்ஷ்மிக்குத் தகுந்த உறைவிடம் இந்தத் தாமரை மலர்தான் என்று லக்ஷ்மிதேவியை அதில் வீற்றிருக்கச் செய்தான். இதை யெல்லாம் பார்த்த கமலகுமாரி, 'நிஜமாகவே இந்தத் தாமரை, என் சிருஷ்டி, அழகாக இருக்கிறபோலிருக்கிறதே' என்று எண்ணத்தொடங்கினாள். இப்பொழுதெல்லாம் கமலகுமாரி, தாமரையினிடத்தில் கோபமோ ஆத்திரமோ கொள்வதே இல்லை! இதுதான் தாமரையின் கதை" என்றான் அந்தப் புதுச் சேவகன்.

இமை கொட்டாமலும், திறந்த வாயை மூடாமலும் இத்தனை நாழிகை கேட்டுக் கொண்டே, அந்தப் புதுச் சேவகனுடன் நடந்து வந்து கொண்டிருந்தாள். கதை முடிந்த பிறகு தான் பிரபா தன் சுய நினைவைப் பெற்றாள். சுற்று முற்றும் பார்த்தாள். "அரண்மனை நந்தவனத்தை விட்டு வெகு தூரம் வந்து விட்டோமே!" என்றாள் ராஜகுமாரி.

"ஆமாம். நான் தான் அழைத்து வந்தேன் ராஜகுமாரி. இனிமேல் நீங்கள் அரண்மனைக்குப் போக முடியாது" என்றான் புதுச் சேவகன். அவன் இந்த வார்த்தையைக் கூறி முடிக்கவில்லை. அதற்குள் அவன் நின்ற இடத்தில் ஒரு கிழவன் தோன்றினான்.

கிழவனைப் பார்த்த கமலகுமாரி அப்படியே திடுக்கிட்டு விட்டாள். "இத்தனை நாழிகை இங்கே அரண்மனைச் சேவகன் அல்லவா நின்று கொண்டிருந்தான். தாமரையின் கதை யெல்லாம் சொன்னானே, அவன் எங்கே போனான்? நீ யார்? எங்கிருந்து வந்தாய்?" என்று கேட்டாள்.

"நான் ஒரு மந்திரவாதி. இதோ இந்தக் காட்டிலிருக்கிறேன். உன்னை ஒரு மாதத்துக்கு முன்பு அரண்மனைத் தோட்டத்தில் பார்த்தேன். அதிலிருந்து உன்னை அழைத்து வந்து வைத்துக் கொள்ள வேண்டும் என்று தீர்மானித்தேன்" என்றான் மந்திரவாதிக் கிழவன். (தொடரும்)

# கோவைக் குரல்

(குழந்தைக் குல விடுதலை இதழ்)

" நூற்றைம்பது வருஷ காலமாக நம் குழந்தைக் குலத்தின் அறிவிலே சூழ்ந்திருந்த பயங்கர இருளுக்கு இந்த வருஷம் ஜூன் மாதம் விடுதலை வந்திருக்கிறது. துள்ளித் திரிந்தும் கண்டும் கேட்டுமே அறிவு பெற வேண்டிய இளம் குழந்தைகள் ஒன்றரை நூற்றாண்டாகத் தினசரி ஐந்து மணி நேரம் அடைபட்டுக் கிடந்த சிறையிலிருந்து விடுதலை பெற்றிருக்கிறார்கள்" என்று "கோவைக் குரல்" ராஜாஜி அவர்களின் புதிய கல்வித் திட்டத்தை வரவேற்கிறது. நல்ல எண்ணத்துடன் மேற்படி திட்டம் சம்பந்தமாகத் தெரிவிக்கப்படும் சந்தேகங்களுக்குத் தக்க முறையில் பதில் அளிக்கிறது. துவேஷ புத்தியுடன் சொல்லப்படும் அபத்தமான எதிர்ப்பு வாதங்களுக்குக் காரசாரமான பதில் அளிக்கிறது. புதிய திட்டத்தினால் ஏற்படக் கூடிய பலன்களைச் சாங்கோபாங்கமாக எடுத்துக் கூறியிருக்கிறது. இவ்வளவு அருமையான புதிய கல்வித் திட்டத்தைப் பற்றி நல்லபடி பிரசாரம் செய்யாமலிருக்கும் காங்கிரஸ் கமிட்டிகளுக்கும் நல்ல 'டோஸ்' கொடுக்கிறது. புதிய கல்வித் திட்டம் பற்றிய பல அம்சங்களையும் தெளிவாகத் தெரிந்து கொள்ள இந்த இதழ் பெரிதும் உதவியாக இருக்கும். மொத்தத்தில் "கோவைக் குரல்" தமிழ் நாட்டின் முன்னேற்றத்தில் அக்கறை கொண்ட தமிழ் மக்கள் அனைவராலும் ஆதரிக்கப்பட வேண்டிய வார இதழ் ஆகும்.

ஆசிரியர்: கே. பி. சாரதி; கிடைக்குமிடம்: பாரதி பிரஸ், கோயமுத்தூர், தனிப் பிரதி விலை: அணா 1. வருஷ சந்தா: ரூபாய் 3.

## வாழ்க்கையில் அதிக ஆனந்தம்




# கால்கேட்

போரேட்டட்

## பேபி பவுடரை

### உபயோகிப்பதால்

........அதனுல்தான் விவேகமுள்ள தாய்மார்கள் தங்கள் குழந்தையின் தளிர்மேனியை அரிச்சலன்றிப் பாது காக்க கால்கேட் போரேட்டட் பேபி பவுடரை உபயோகிக்கிறார்கள். மிக மெல்லிய மேனிக்கும் இதம் அளிப்ப தற்காக விஞ்ஞான முறையில் தயாரிக் கப்பெற்றது ... புண்படுத்தும் உஷ் ணம் தாக்காமல் தடுக்கிறது; குழந்தை நாள் முழுதும் ஜிலுஜிலுவென்று சௌகரியமாய் இருக்க உதவுகிறது. இதன் மெல்லிய நறுமணம் உங்களை யும் குழந்தையையும் கவர்ந்துவிடும்.

பணம் மிச்சம் — ஜயண்ட் சைஸை வாங்குங்கள்

---

# மலச்சிக்கலை

## ஒரே இரவில்

## அகற்றுகிறது






ப்ரூக்லாக்ஸ்

## ருசி மிகுந்த சாக்கலெட் மலமிளக்கி

ஏஜண்டுகள்: ஓரியண்டல் மெர்க்கண்டைல் ஏஜென்ஸி
99-A, அரண்மனைக்காரத் தெரு, மதராஸ்-1

# நூற்றுண்டு விழா

சமீபத்தில் தூத்துக்குடியிலிருந்து வந்த ஒரு நண்பரைச் சந்தித்தோம்.

"என்ன செய்தி! தூத்துக் குடியில் ஏதாவது விசேஷம் உண்டா!" என்றோம்.

அவர் ஒரு முறை ஏற இறங்கப் பார்த்து விட்டு, "உண்மைதானு! உங்களுக்கு ஒன்றுமே தெரியாதா!" என்ருர்.

"என்ன!" என்று கேட்டோம்.

"தாங்கள் இந்த உலகத்தில்தானே இருக்கிறீர்கள்!" என்ருர்.

"அதில் உமக்கென்ன சந்தேகம்!"

"கொஞ்சம் எனக்குச் சந்தேகமாகத் தான் இருக்கிறது. நீங்கள் இந்த உலகத்தில் இருந்தால் தூத்துக்குடி எஸ். ஏ. வி. ஹைஸ்கூலுக்கு நூற்றுண்டு விழா கொண்டாடப் போகும் விஷயம் உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டுமே! அது சம்பந்தமாகத்தானே தங்களைப் பார்க்க வந்திருக்கிறேன்" என்று சொன்னுர்.

"அந்தப் பள்ளிக்கூடம் ஆரம்பித்து நூறு வருஷங்கள் ஆகிவிட்டதா!" என்று கேட்டோம்.

திருநெல்வேலி ஜில்லாவிலிருக்கும் தூத்துக்குடி நகரில் கீழூர் என்ற பகுதியில் நூற்றியொரு வருஷங்களுக்கு முன்னல் அதாவது 1852-ம் வருஷம் சில உற்சாகிகள் சேர்ந்து மாதா மாதம் ஆளுக்குக் கொஞ்சம் சந்தா செலுத்தி ஒரு பள்ளிக்கூடத்தை ஆரம்பித்தார்கள். அந்தப் பள்ளிக்கூடத்தில் ஆங்கிலமும் தமிழும் கற்றுக் கொடுப்பது என்று தீர்மானித்தார்கள். அதையே காரணப் பெயராக வைத்து அந்தப் பள்ளிக்கூடத்துக்கு 'சப்ஸ்கிருப்ஷன் ஆங்கிலோ வர்னகுலர் ஸ்கூல்' என்று பெயரிட்டார்கள். இப்படிச் சந்தா வசூலில் ஆரம்பமான மேற்படி பள்ளிக்கூடம் எத்தனையோ கஷ்டங்களுக்கு மத்தியில் வளர்ந்து ஒரு ஹை



எஸ். ஏ. வி. ஹைஸ்கூல்

கே. ராமசாமி ஐயங்காராவர். அவர் அந்தப் பள்ளிக்கூடத்தின் கரஸ்பாண்டெண்டாக அமர்ந்து சுமார் நாற்பது வருஷ காலமாக ஆர்வம் குன்றுமல் அதன் வளர்ச்சிக்குப் பாடுபட்டு வருகிருர்.

இன்று அந்தப் பள்ளிக்கூடத்தோடு சேர்ந்து பழைய நாளைய எலிமெண்டரி ஸ்கூலும், பெண்களுக்கான ஒரு எலிமெண்டரி ஸ்கூலும் நடந்து வருகின்றன. ஆயிரத்துக்கு மேற்பட்ட மாணவர்கள் படித்து வருகிருர்கள். நாளுக்கு நாள் மாணவர்களின் எண்ணிக்கை உயர்ந்து வருவதால் பள்ளிக்கூடத்தில் இட நெருக்கடி ஏற்பட்டு வருகிறது.

இந் நெருக்கடியைத் தீர்த்து மேலும் பல மாணவர்கள் சேர்ந்து படிப்பதற்கு எண்பது வயது நிரம்பிய அந்தப் பள்ளிக்கூட கரஸ்பாண்டெண்ட் ஸ்ரீ கே. ராமசாமி ஐயங்கார் பாடுபட்டு வருகிருர். பள்ளிக்கூடத்தின் நூற்றுண்டு விழா ஞாபகார்த்தமாக நாற்பதினுயிரம் ரூபாயில் ஒரு




இதயவாசி

பூஜை அறையிலிருந்து கிளம்பிய சாம்பிராணிப் புகை சுருள் சுருளாக அவிழ்ந்து பிரிந்து கொண்டிருந்தது. வீடு பூராவும் மல்லிகையின் கம் என்ற மணமும், ஊது வத்தியின் போதை கலந்த சுகந்தமும் பரவியது. இளம் வெய்யிலில் பளபளத்த குத்து விளக்கு ஆடாது அசையாது நிதானமாக எரிந்து கொண்டிருந்தது. ஏதோ ஒரு சுலோகத்தை முணு முணுத்துக் கொண்டே பூத் தொடுத்துக் கொண்டிருந்தாள் விஜயா.

"விஜயா!" என்று கூப்பிட்டுக்கொண்டே மாடியிலிருந்து இறங்கி வந்தான் சந்தானம். பாதி தொடுத்த பூவை வைத்து விட்டு எழுந்தாள் அவள். சமையலறையில் வேலையாக இருந்த சந்தானத்தின் தாயாரும் மகனுடைய குரலைக் கேட்டு வெளியே வந்தாள்.

"அவள் எங்கே அம்மா?" என்று கேட்டான் தாயாரிடம்.

"பூஜை அறையில் இருப்பாள், இன்றைக்கு வெள்ளிக்கிழமை, பூஜை முடிய நேரமாகும். பூஜை பண்ணிப் பண்ணி என்ன பயன்? குலத்தை விளங்க வைக்க ஒரு குழந்தை இல்லையே! இந்தத் தடவை என்ன பண்ணப் போகிறாளோ!" என்று வெறுப்பு பொங்கக் கூறினாள் சாவித்திரி அம்மாள்.

நீண்ட பெரு மூச்சுடன் அங்கிருந்து நகர்ந்து விட்டான் சந்தானம். அதற்கு மேல் நின்றால் அம்மா ஏதாவது சொல்லிக் கொண்டே இருப்பாள் என்பது அவனுக்கு நன்றாகத் தெரியும். அவனுக்குக் காரணமில்லாமல் கோபம் கோபமாக வந்தது. விஜயாவை அவசரமாகத் தேடிக்கொண்டு பூஜை அறையினுள் நுழைந்தான் அவன்.

மாமியார் சொன்னவைகளைக் கேட்டுக் கொண்டு சிலைபோல வாசற் படியில் நின்று கொண்டிருந்தாள் அவள்; கண்களில் கண்ணீர் கரை கட்டி நின்றது.

"பூஜை முடிந்ததோ இல்லையோ?" என்று அவளிடம் ஆத்திரத்துடன் கேட்டான் சந்தானம். 'ஏன்?' என்று கேட்கும் பாவனையில் தலை நிமிர்ந்தாள் அவள்.

"பூஜை பண்ணிப் பண்ணி என்ன சுகத்தைக் கண்டாயோ தெரியவில்லை. பூஜையாம்; தெய்வமாம். இதெல்லாம் எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. இனிமேல் இந்த மாதிரி வேண்டாத காரியங்களைச் செய்து கொண்டிருந்தால் எனக்கு ரொம்பக் கோபம் வரும்" என்றான்.

அவனுடைய கோபத்தைக் கண்டு நடுங்கினாள் விஜயா. பெருகி நின்ற கண்ணீர் உடைப்பெடுத்து அவள் அழகிய கன்னத்தில் புரண்டோடியது.

"சரி, சரி, அழ ஆரம்பித்து விட்டாயா? வீணாக உடம்பைக் கெடுத்துக் கொள்ளாதே என்று சொன்னால் அழுது விடு. டாக்டர் உன்னை அலட்டிக் கொள்ளக் கூடாது என்று சொன்னது ஞாபகம் இருக்கிறதா?"

"உம்" கொட்டினாள் விஜயா.

"இதோ பாரு விஜயா! படுக்கையை விட்டு அசையாமல் இருந்தால் நல்லது என்று டாக்டர் சொல்கிறார். நீ பூஜை பண்ணட்டுமா, பூத்தொடுக்கட்டுமா என்கிறாய். இந்தத் தடவை ஏதாவது ஆனால் அம்மாவுக்குப் பதில் சொல்ல என்னால் முடியாது. சொல்லிவிட்டேன்" என்று சொல்லிச் சந்தானம் குளிப்பதற்குப் பின்புறம் போனான்.

விஜயாவின் உள்ளம் குமைந்தது. சுவாமி படங்களுக்கு முன்னால் வந்து கை கூப்பினாள் அவள். கண்ணீர் ஆறாகப் பெருகி மேல் புடவை நனைந்தது. குத்து விளக்கின் சுடர் நெளிந்து அசைந்தாடியது.

"தேவி! என்னை ஏன் சோதனை செய்கிறாய்! பெண்ணாகிய நீயே என்னை வாட்டி வதைப்பது அழகா? இந்தத் தடவை என்னை ஏமாற்றாதே! குழந்தைக்குப் பதிலாக என்னை வேணுமானாலும் அழைத்துக் கொள்ளு. என் ஆயுளையும் சேர்த்துக் குழந்தைக்குக் கொடுத்துவிடு!" என்று மனமாரப் பிரார்த்தனை செய்தாள் விஜயா. அவள் பிரார்த்தனையை ஏற்றுக் கொண்டது போல தீபத்தில் சுடர் தெறித்தது. காற்றில் மிதந்து வந்த கோயில் மணியின் கம்பீரமான ஓசை 'ஓம்! ஓம்!' என்று ஒலித்தது.

* * *

சந்தானம் பெற்றோர்களுக்கு ஒரே பிள்ளை. அவன் குழந்தையாக இருக்கும் பொழுதே தந்தையை இழந்து விட்டான். தன்னுடை பூர்வீக சொத்தில் செல்வமாக மகனை வளர்த்தாள் அவன் தாய் சாவித்திரி. சந்தானத்தின் மாமா அவர்கள் குடும்பத்தை மேற்பார்வை பார்த்துக் கொண்டார். நன்றாகப் படித்து இஞ்சினியர் பட்டம் பெற்றான் அவன். அவனுடைய வாழ்க்கை சென்னையிலே பங்களாவும் காருமாகத் துவங்கியது. தாயின் விருப்பப்படி மாமாவின் பெண் விஜயாவை மனைவியாகவும் ஏற்றுக் கொண்டான். பாடுபட்டு வளர்த்த மாமாவுக்குப் பூரண திருப்தி ஏற்பட்டது. வாழ்க்கை இன்பக் களஞ்சியமாக இருந்தது. கவலையற்று நிம்மதியாக வாழ்ந்தான் சந்தானம்.

ஒரு நாள் இரவு. சந்தானம் வீட்டிற்கு வர நேரமாகி விட்டது. உடைகளைக் களைந்து விட்டுச் சாப்பிட வந்து உட்கார்ந்த அவன் கண்கள் விஜயாவைத் தேடின. அவளுக்குப் பதிலாக அம்மா சாதம் பரிமாற வந்தது அவனுக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது.

"விஜயா எங்கே அம்மா?" என்று கேட்டான் மிகுந்த ஆவலுடன்.

"தூக்கம் வருகிறது என்று சொன்னாள். நான்தான் போய்ப் படுத்துக் கொள்ளச் சொன்னேன்" என்றாள்.

"மணி ஒன்பது அடிக்கவில்லை. அதற்குள் தூக்கம் வந்து விட்டதாக்கும்" என்று சிறிது கோபத்துடன் கூறினான் சந்தானம்.

"பிள்ளைத்தாச்சிப் பொண்ணுக்கு ஒன்பது மணிக்குத் தூக்கம் வருவது அதிசயமா என்ன? ஏன்! என் கை பட்ட சாப்பாடு உனக்குக் கசக்கிறதோ?" என்றாள் அவனுடைய அம்மா வேடிக்கையாக.

சந்தானத்துக்கு வானத்தில் பறப்பது போல இருந்தது. ஆனந்தத்தினால் இலையில் இருந்த சாப்பாடு செல்லவில்லை. எப்படியோ இரண்டு வாய் அள்ளிப் போட்டுக் கொண்டு மாடிக்கு விரைந்தான். விஜயா படுக்கையில் துவண்டு படுத்திருந்தாள். நிலவொளி சாளரத்தின் வழியாகப் பாய்ந்து அவளுடைய கன்னத்திலே திட்டாக பதிந்திருந்தது. ஆழ்ந்த நித்திரையி லிருந்த அவளுடைய கன்னத்தை அன்புடன் தடவிக் கொடுத்தான் சந்தானம். சிலிர்த்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்தாள் விஜயா.

"விஜயா! என்னிடம் சொல்லவே யில்லையே!" என்றான் அவன் செல்லமாக. விஜயா நாணத்துடன் தலை கவிழ்ந்தாள். வெளியே பூத்திருந்த நிலவு எட்டிப் பார்த்துச் சிரித்தது. நாட்கள் வேகமாக விரைந்தன. மாதங்கள் நகர்ந்தன.

நல்ல நாள் பார்த்து விஜயாவை மாயூரத்துக்கு அழைத்துப் போனார் அவள் தந்தை. வரப்போகும் குழந்தையின் நினைவிலே விஜயாவின் பிரிவு சந்தானத்துக்கு இன்பமாகத்தான் இருந்தது. விளையாட்டுச் சாமான்களும் பொம்மைகளும் வாங்கி நிறைத்தான் அவன். சாவித்திரி அம்மாளும் தேவையான சாமான்களைப் பார்த்துப் பார்த்து வாங்கி வைத்தாள். பிறக்கப் போகும் குழந்தையை வரவேற்கும் ஏற்பாட்டில் முனைந்திருந்தனர் தாயும் மகனும்.

அவர்கள் ஆசைக்குச் சாட்டையடி கொடுப்பது போல மாயூரத்திலிருந்து கடிதம் வந்தது. அதில் "விஜயாவுக்குப் பிரசவமாகிப்



திரு க. ஆறுமுகம் (G. P. O.) கோலாலம்பூர், அவர்களின் குமாரன் திருநிறைச் செல்வன் இராசேந்திரனுக்கும் திரு ப. அரசப்பன் கோர்ட் துவிபாஷகர், அலோர்ஸ்டார் அவர்களின் குமாரத்தி திருநிறைச் செல்வி பாலசுந்தரிக்கும் சென்ற 28-5-53 ல் கோலாலம்பூர், இன்னான் ரோட் 3½ மைலிலிருக்கும் மணமகன் இல்லத்தில் சிறப்பாகத் திருமணம் நடந்தது. அவ்வமயம் பல பிரமுகர்களும், உறவினரும், நண்பரும் வந்திருந்து மணமக்களை வாழ்த்திச் சென்றனர்.



பம்பாய் நகரின் பிரபல பத்திரிகைகளான "பிரீ பிரஸ் ஜர்னல்" "பாரத ஜோதி" "நவசக்தி" "ஜனசக்தி" பத்திரிகைகளின் அதிபர் திரு. எஸ். சதானந்தம் அவர்களின் செல்வப் புதல்வி ஸ்ரீமதி உமாவுக்கும் ராஞ்சி நகர் ஸ்ரீ எஸ். வெங்கட்ரமணன் அவர்களின் குமாரர் ஸ்ரீ வி. சீனிவாசன் அவர்களுக்கும் பம்பாயில் ஜூலை 3-ல் திருமணம் விமரிசையாக நடைபெற்றது. திருமணத்தை யொட்டித் தாஜ்மகால் ஹோட்டலில் நடந்த விருந்துக்கும் பம்பாய்ப் பிரமுகர்கள் பலரும் விஜயம் செய்து சிறப்பித்தனர்.

பிறந்த ஆண் குழந்தை அரை மணியிலே இறந்து விட்டது. விஜயா சுகம்" என்று இரண்டே வரிகள் இருந்தன. சந்தானத்துக்குச் சப்பென்றுபோய்விட்டது. சாவித்திரி அம்மாள் வாங்கி வைத்திருக்கும் சாமான்களைப் பார்த்துப் பெருமூச்செறிந்தாள்.

இரண்டு மாதங்கள் கழித்து மாயூரத்திலிருந்து சென்னைக்குத் திரும்பினாள் விஜயா. ஸ்டேஷனில் சந்தானத்தைப் பார்த்தபொழுது அவள் கண்கள் கலங்கின.

"ஏனிப்படி இளைத்து விட்டாய் விஜயா! உடம்புக்கு ஒன்றுமில்லையே?" என்று அவன் ஆதரவுடன் கேட்டது அவளுக்கு ஓரளவு ஆறுதலைக் கொடுத்தது.

"உடம்பு ஒண்ணுமில்லே, சந்தானம். எப்பொழுதும் குழந்தையை நினைத்துக்கொண்டு ஏங்குகிறாள் போல இருக்கிறது. சரியா சாப்பிடுகிறது இல்லே. சொன்னாலும் கேட்கிறது இல்லே. அதனாலேதான் சீக்கிரமாக உன்னிடம் கொண்டு வந்து ஒப்பித்து விட்டேன்" என்றார் சந்தானத்தின் மாமா.

"என்ன விஜயா, குற்றச் சாட்டு பலமாயிருக்கே!" என்றான் சந்தானம் இலேசாகச் சிரித்துக் கொண்டே. விஜயாவின் உதட்டில் சோகப் புன்னகை ஒன்று தோய்ந்தது.

எல்லோரும் வீடு வந்து சேர்ந்தனர். மருமகளைப் பார்த்த சாவித்திரி அம்மாள் "கையும் குழந்தையுமா அழைச்சுண்டுவரக் கொடுத்து வைக்கலையே!" என்று பல்லவி பாடி வரவேற்றாள். கணவனும் மாமியாரும் வாங்கி வைத்திருக்கும் சாமான்களைப் பார்த்தபோது விஜயாவுக்கு எல்லையில்லாத் துக்கம் பொங்கியது. மள மளவென்று மாடியறைக்குப் போய்த்தனிமையில் விம்மினாள் அவள். கீழே எல்லா இடங்களிலும் அவளைத் தேடிவிட்டு மாடிக்கு வந்த சந்தானம் அவள் அழுவதைப் பார்த்துப் பிரமித்து நின்றான்.

"விஜயா, இதென்ன அசட்டுத்தனம்? தெய்வச் செயலை மாற்ற நம்மால் முடியுமா என்ன? வந்ததும் வராததுமாக அழுது கொண்டு...!" என்று சொல்லிக்கொண்டே சந்தானம் விஜயாவின் முகத்தைச் சற்று நிமிர்த்தினான்.

கன்னத்தில் வரி வரியாகக் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. "என்னாலே உங்களுக்கு எத்தனை ஏமாற்றம்?" என்று கேட்டாள். வேதனையும் ஆத்திரமும் ததும்ப அவனைப் பார்த்தாள்.

"சீ அசடே, அதற்கு நீ என்ன செய்ய முடியும், வேண்டாததற்கு அழாதே. அம்மா தேடுவாள். வா, கீழே போகலாம்" என்றான் சந்தானம். இருவரும் மாடியிலிருந்து கீழே இறங்கினார்கள்.

நாளடைவில் விஜயாவின் புண்பட்ட நெஞ்சம் ஆறிவிட்டது. பழையபடி வாழ்க்கை தித்தித்தது. தம்பதிகள் அந்தச் சம்பவத்தையே மறந்தவர்களைப் போல இன்ப லோகத்தில் சஞ்சரித்தனர். இந்த இன்பத்தினிடையே விஜயா இரண்டாவது தடவை கருத் தரித்தாள். பெண்மைக்குத் தாய்மை மெருகு பூசியது. அடிபட்டு விழுந்து கிடந்த ஆசை எல்லாருடைய மனத்திலும் உடலைச் சிலிர்த்துக் கொண்டு மறுபடி எழுந்து நின்றது. இந்தத் தடவை விஜயாவை மாயூரத்துக்கு அனுப்பி வைப்பதற்குச் சம்மதிக்கவில்லை சாவித்திரி அம்மாள்.

"சந்தானம், இந்தத் தடவை விஜயாவை மாயூரத்துக்கு அனுப்ப வேண்டாம். இங்கேயே வைத்துக் கொள்ளலாம்!" என்று தாய் சொன்னதை மறுக்கவில்லை சந்தானம். 'விஜயாவை அனுப்ப வில்லை' என்று மாமாவுக்குக் கடிதமும் எழுதி விட்டான்.

எதிர் பார்த்த அந்த நாளும் வந்தது. விஜயாவுக்குப் பிறந்த குழந்தை மூன்று நாளைக்கு மேல் இந்த உலகத்தில் இருக்க விரும்பவில்லை. அந்தக் குடும்பத்தினர் மிகவும் ஏமாற்றம் அடைந்தனர். விஜயாவின் மனம் கசக்

குச்சுக்காக உடைந்தது. அவள் உடல் தேற வெகு நாட்களாயிற்று. சந்தானம் அவளுக்கு எத்தனையோ ஆறுதல் கூறிச் சமாதானப் படுத்தினன். சாவித்திரி அம்மாள் மட்டும் அடிக்கடி 'என்ன பாவமோ! குழந்தை தங்கவில்லையே' என்று தொண தொணத்துக் கொண்டேயிருந்தாள். காலம் மட்டும் எதற்கும் நிற்காது போய்க் கொண்டு தான் இருந்தது.

விஜயாவின் உடல் கொஞ்சம் தேறியதும் தெய்வ வழிபாடுகளில் ஈடுபடச் செய்தாள் சாவித்திரி அம்மாள். மகனையும் மருமகளையும் ராமேசுவரம் அழைத்துப் போய் நாகப் பிரதிஷ்டை செய்தாள். இன்னும் என்னென்னவோ விரதங்கள் அனுஷ்டித்தாள் அவள். விஜயா மூன்ருவது தடவை கருத்தரித்தபோது பிரபல டாக்டர்களின் யோசனைப்படி நல்ல மருந்துகள் வாங்கிக் கொடுத்தான் சந்தானம். படுக்கையில் அசையாது இருக்கச் செய்தான். ஆனல் இதெல்லாம் செய்ததற்குப் பலன் குழந்தை இறந்தே பிறந்தது. இந்த முறை பெருத்த ஏமாற்றம் சந்தானத்தையே தாக்கியது. விஜயா நடைப் பிணமானள். அவளுடைய தாயுள்ளம் வேதனையால் ஏங்கித் துடித்தது. அவளுடைய வேதனையை இன்னும் அதிகமாக்குவது போல் சாவித்திரி அம்மாளிடமிருந்து சுடுமொழிகள் உதிர்ந்து மனத்தைச் சுட்டுப் பொசுக்கின.

"வம்சத்தை விளங்க வைக்க ஒரு குழந்தை தங்காதா? இவனேடு வம்சமழிந்து விடுமோ என்னவோ! கல்யாணம் பண்ணி எட்டு வருஷமாகியும் வீட்டிலே ஒரு குழந்தை தவழ்ந்து விளையாடக் கொடுத்து வைக்கவில்லையே!" என்று தானக அடிக்கடி வாய் விட்டுச் சொல்லுவாள் சாவித்திரி அம்மாள். தினமும் பூஜை விளக்கேற்றி நமஸ்கரிக்கும் போது "என் குல விளக்கையும் ஏற்றுடி, அம்மா பராசக்தி!" என்று வேண்டிக் கொள்வாள். அதைப் பார்க்கும்போதெல்லாம் விஜயாவின் மனத்தில் பழுக்கக் காய்ச்சிய ஊசியைச் செருகுவது போல இருக்கும். வீட்டுக்கு யாராவது வந்துவிட்டால் அவர்களிடம் இதைப் பற்றிப் புலம்பத் தொடங்கி விடுவாள் சாவித்திரி அம்மாள்.

"என்னவோ இந்தப் பெண்ணுக்கு ஒரு குழந்தை தங்கவில்லையே! இவளாலே தான் குடும்பம் விளங்கவேணும். பகவான் என்ன நினைத்திருக்கிருரோ தெரியவில்லை" என்பாள். சாவித்திரி அம்மாளின் ஏக்கத்தைக் கண்டு அனைவரும் அனுதாபப் பட்டனர். விஜயாவின் நைந்த உள்ளத்துக்கு அந்த வீட்டில் ஆறுதல் கிடைப்பது அரிதாகி விட்டது. அம்மாவின் தொண தொணப்பு சகியாத சந்தானம் வீட்டில் அதிகம் தங்கமாட்டான். வெறிச்சோடியிருக்கும் வீடு அவனுக்கு அளவற்ற வெறுப்பைத் தந்தது.

விஜயா தன் மனக் குமுறல்களைத் தெய்வத்தினிடம் கொட்டி ஆறுதல் பெற முயன்ருள். பூஜை செய்வதிலும், சுலோகம் படிப்பதிலும் ஓரளவு நிம்மதியைக் கண்டாள் அவள். சிறிது அளவு மன நிம்மதியுடனிருந்த விஜயா நான்காவது முறையாக கருத் தரித்தாள். நெஞ்சில் வேதனை புகைந்தது. சாவித்திரி அம்மாளின் அலுப்பு நிறைந்த சொற்கள் வேறு அவள் மனத்தைப் புண்படுத்தின.

இந்தத் தடவையும் குழந்தை இறந்து விட்டால் தன் மகனுக்கு இரண்டாவது மணம் செய்வதற்குத் தயாராக இருந்தாள் சந்தானத்தின் தாயார். இந்தக் கூரிய ஊசி விஜயாவின் புண்பட்ட உள்ளத்தைத் துளைத்துக்கொண்டு பாய்ந்தது. தன் மாமியாரின் இரக்கமற்ற சொற்கள் அவள் காதில் ஒலித்துக் கொண்டே இருந்தன. அதனல் அவள் மனம் துடியாய்த் துடித்தது. அதே சமயத்தில் தன் அருமைக் கணவரின் அன்பு முகமும் தோன்றி அவளுக்கு ஆறுதல் அளித்து வந்தது. 'குழந்தை இல்லையே என்று எனக்கு ஏக்கமில்லையா? பத்து மாதங்கள் சுமந்து பெற்ற என் குழந்தைகளைப் பறிகொடுத்து விட்டு நிற்கும் எனக்கு ஆறுதல் அளிப்பதற்கு இப்படித் தான் பேசுவதா? கடவுளே! குழந்தையும் இறந்து, ஆதரவான சொற்கள் கூட இல்லாது தவிக்கும் என்னைக் கண் திறந்து பார்த்துக் கருணை பாலிக்க மாட்டாயா?'



பரத நாட்டிய வித்வான் ஸ்ரீ கே. என். தண்டாயுதபாணி அவர்களின் சகோதரர் திரு. கே. என். பக்கிரிசாமி (புதுடில்லி அகில இந்திய ரேடியோ) அவர்களுக்கும் கும்பகோணம் ஸ்ரீ எஸ். ஞானசம்பந்தம் பிள்ளை அவர்களின் குமாரி சௌ. ஜி. கிரிஜாவுக்கும் 17-6-53ல் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.

---

என்று தெய்வத்திலிடம் பல பிரார்த்தனைகள் செய்து கொண்டான் அவன்.

• • •

மறுபடி அந்த நாள் வந்தது. அன்று காலையிலிருந்தே விஜயாவினுடைய உடல் நிலை சரியாக இல்லை. டாக்டரை அழைத்து வந்த சந்தானத்தின் மனத்தில் ஏமாற்றமும் ஆவலும் ஒன்றை யொன்று போட்டியிட்டன. சாவித்திரி அம்மாள் ஏதோ முணுமுணுத்துக் கொண்டே பரபரப்புடன் இங்கும் அங்கும் ஓடிக் கொண்டிருந்தாள்.

ஒவ்வொரு விநாடியும் ஒரு யுகமாகக் கழிந்து சென்று கொண்டிருந்தது.

தான் இறந்தால்தான் குழந்தை பிழைக்கும் என்ற நினைவு விஜயாவின் இதயத்தில் ஆழமாகப் பதிந்து விட்டது. "தேவி, என்னை அழைத்துக் கொண்டு விடு! குழந்தைக்கு நீண்ட ஆயுளைக் கொடுத்துக் காப்பாற்று!" என்று அடிக்கடி முணு முணுத்துக் கொண்டாள். அவள் பிரார்த்தனையை அங்கீகரிப்பது போல மறுநாள் காலை விஜயாவுக்கு ஜன்னி கண்டது. நினைவு மாறிப் பிதற்றத் தொடங்கினாள்.

"அவள் நிலையைக் கண்டு பயந்து விட்டான் சந்தானம். உடனே ஓடிப்போய் டாக்டரை அழைத்து வந்தான் அவன். அவள் தேக நிலையைப் பரிசோதித்த டாக்டர் "இந்தத் தடவை பிரசவித்ததும் இவள் பிழைப்பது சந்தேகம்" என்று கூறிவிட்டார். பிறகு ஏதோ ஊசி போட்டார்.

இரவு பத்து மணிக்கு மேல் விஜயாவுக்கு நல்ல நினைவு வந்தது. அருகில் கவலையே உருவமாக உட்கார்ந்திருந்த சந்தானத்தின் கைகளை இறுகப் பற்றிக்கொண்டாள் அவள். கண்களில் நீர் கசிந்து இமைகளை நனைத்தது. திக்கித் திணறிப் பேசினாள் அவள்.

"நான் இனிமேல் பிழைக்க மாட்டேன்!" என்று விஜயா ஏதோ சொல்ல ஆரம்பித்தாள்.

"கண்ணே விஜயா, நீ குல விளக்கை ஏற்றிவைத்து விட்டாய். அதோ உன் பிள்ளை படுத்திருக்கிறான், பார். பிரசவத்தின்போது மயக்கம் கொடுத்ததினால் உனக்கு நடந்தது எதுவும் தெரியாது! உன் உடம்பும் சீக்கிரம் குணமாகி விடும். இனிமேல் கவலைப்பட வேண்டியதில்லை என்று டாக்டர் சொல்லி விட்டார்" என்று அவள் மாமியார் மூச்சு விடாமல் பேசினாள்.

விஜயாவுக்குத் தான் எந்த உலகத்திலிருக்கிறோம் என்றே தெரியவில்லை. தான் காண்பது கனவா என்று கூட அவளுக்குச் சந்தேகமா யிருந்தது.

'குவா, குவா' என்று சிசு அழுதது. அந்த அழுகுரல் அவள் காதில் தேன் மாரி பொழிவது போலிருந்தது. உடனே விஜயாவின் மாமியார் குழந்தையை எடுத்துக் கொண்டு வந்து அவள் அருகில் விட்டாள். தன் சிசுவின் அழுகுரலைக் கேட்டு அதை ஸ்பரிசித்த பின்புதான் விஜயாவுக்குத் தான் காண்பது கனவல்ல என்று நிச்சயமாய்த் தெரிந்தது. ஆனந்த மிகுதியில் அவள் கண்களில் நீர் பெருகியது. குழந்தையை அன்புடன் அணைத்துக் கொண்டாள்.

அன்றலர்ந்த மலர்போல்
புதுமையாகவும் மோகன
காந்தியுடனும் விளங்குங்கள்...

# ஹமாம்

## டாய்லட் ஸோப்பு

*உபயோகியுங்கள்*




ஹமாம் புதிய
வாசனை பொருந்தியது...
அதிக நாள் வரவும்
செய்கிறது!

தி டாடா ஆயில் மில்ஸ்
கம்பெனி லிமிடெட்



டாடா தயாரிப்பு




# மனோரமா

ரமண்லால் வஸந்தலால் தேசாய்

மொழிபெயர்ப்பு: ரா. வீ.

## 5. குழந்தை வீறிட்டது!

நகரத்துத் தனவந்தர்களுள் முதன்மையானவரும், ஏராளமான நிலபுலன்கள் படைத்த ஜமீன்தாருமான மாதவப் பிரஸாதின் மனைவி காலமாகி விட்டாள். பணம் படைத்திருந்தும் பணச் செருக்கே இல்லாதவர் மாதவப் பிரஸாத். எனவே, நகரம் முழுவதிலும் அவருக்கு நல்ல பெயர். அக்கம் பக்கத்துத் தெருவார்களும் அண்டை அயலார்களும் அவரிடத்தில் அளவு கடந்த அன்பும், மட்டற்ற மதிப்பும் கொண்டிருந்தனர். அவர் லட்சாதிபதி. அத்துடன் அரிய நல்ல குணங்கள் படைத்தவர். ஆகவே, பெரியார்கள் குழுவில் அவருக்குப் பெருமதிப்பு ஏற்பட்டிருந்தது. சர்க்கார் உத்தியோகஸ்தர்களிடமும் அவருக்கு நெருங்கிய தொடர்பு உண்டு. பெரிய பதவியில் உள்ள உத்தியோகஸ்தர்கள்கூட அவருக்கு மிகவும் மரியாதை செலுத்தி வந்தனர்.

ராமலால் விதியின் சதியில் சிக்கிக் கெட்ட காலத்துக்கு இலக்காகி மிச்சம் மிகுதியிருந்த நிலபுலன்களையும், வீடு வாசல்களையும் ஏலத்தில் இழக்க நேர்ந்தபொழுது, மாதவப் பிரஸாத் தான் அவருக்குக் கைகொடுத்து உதவினார்; அவமான முற்று அல்லலுறுவதிலிருந்து அவரைக் காப்பாற்றினார்.

அது முதற்கொண்டுதான் ராமலாலுக்கும் மாதவப் பிரஸாதுக்கும் நெருங்கிய நட்பு ஏற்பட்டது. மாதவப் பிரஸாதின் மனைவியும், சுபத்திராவை மிகவும் மதித்து மரியாதைகாட்டத் தொடங்கினாள்; எதற்கு எடுத்தாலும் சுபத்திராவை ஆலோசனை கேட்டு அதன்படி நடக்கத் தொடங்கினாள்.

மாதவப் பிரஸாதின் மனைவி இரண்டு வருஷங்களாக நோய் வாய்ப் பட்டதே இல்லை என்று சொல்லமுடியாது. அப்படிச்சொன்னாலும் யாரும் நம்பமாட்டார்கள். ஏழைகளைத் தவிர எல்லோருக்கும் நோய்வாய்ப்பட உரிமை உண்டு; அதுவும் பூரண உரிமை உண்டு. அது மட்டும் அல்ல; பெரிய மனிதனாகிப் பெருமையை நிலைகாட்டிக் கொள்ள வேண்டும் என்றால், நோய்வாய்ப்படுவது மிக மிக—எத்தனை 'மிக' போட்டாலும் தகும்—அத்தனை அவசியம் ஆகும்.

இதில் பணக்காரர்களின் மீது சிறிதும் குற்றம் இல்லை; குற்றங் குறை கூறவும் முடியாது. ஏனெனில் அவர்கள் உடல் உழைப்பின் அவசியத்தை உணர்வதில்லை. அதில் ஆர்வத்தைக் காட்டுவதும் இல்லை. உண்டு களித்து உல்லாசமாக வாழ்வதையே அவர்கள் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கருதி விடுகிறார்கள். அதன் பலனாக அவர்களை நோய் நொடி ஆட்கொள்ளுகிறது; ஆட்கொள்வதோடு மட்டும் நிறுத்தாமல் ஆள்கொல்லியாகவும் உருவெடுத்து விடுகிறது.

மாதவப் பிரஸாதின் மனைவியையும், அவளுடைய பணமும் பணத் திமிரும்தான் கொன்றன. முப்பது வயது நிறைவதற்குள்ளேயே அவளுக்கு நான்கு குழந்தைகள் பிறந்து விட்டன. அவற்றில் இரண்டு இறந்தும் விட்டன. கடந்த ஓராண்டுக்கு மேலாக அவள் க்ஷய ரோகத்தினால் பீடிக்கப்பட்டிருந்தாள். அவளுக்கு வைத்தியம் பார்த்த டாக்டர்களும் வியாதி முற்றி விடவே, "பிழைப்பாள் என்ற நம்பிக்கை இல்லை" என்று சொல்லிக் கையை விரித்து விட்டார்கள்.

அதைக் கேட்ட மாதவப் பிரஸாதின் இருதயத்திலே பேரிடி விழுந்தது. அவர் தம்

மனைவியை உயிருக்கு உயிராக நேசித்து வந்தார். அவள் உயிரைக் காப்பாற்றுவதற்காகக் காசினால் முடிந்ததைச் செய்ய மாதவப் பிரஸாத் கலங்கவில்லை; தயங்கவும் இல்லை. காசைத் தண்ணீராகச் செலவழித்தார், அவள் பிழைத்தால் போதும் என்ற எண்ணத்தில். ஆனால் பணத்தினால் ஒன்றும் செய்ய முடியவில்லை. காசு கரைந்தது; தான் கரைவது போலவே அவளுடைய உயிரையும் உடலையும் கரைத்தது. டாக்டர்கள் சொன்ன சொல், எழுத்துக்கு எழுத்து, சொல்லுக்குச் சொல் பலித்து விட்டது. நாற்பது வயதாவதற்குள்ளாக மாதவப் பிரஸாத் தம் அருமை மனைவியை இழந்து விட்டார்.

மாதவப் பிரஸாதின் மன வருத்தத்தைப் போக்குவதற்குச் சுபத்திராவும் ராமலாலும் மிகுந்த முயற்சிகள் எடுத்துக் கொண்டார்கள். உலகத்தின் போக்கைக் கூறி அவரைச் சமாதானப் படுத்தினார்கள்; தேற்றினார்கள். ஆனால் மாதவப் பிரஸாதின் மன வருத்தம் எவ்வளவு தேற்றியும் மறையவும் இல்லை; குறையவும் இல்லை. மனைவியைப் பிரிந்த மாதவப் பிரஸாதின் மன வேதனையைச் சொல்லி முடியாது. அவருக்குத் தமது வாழ்க்கையே வெறிச்சோடி விட்டதுபோல- சூன்யமாகி விட்டது போலத் தோன்றியது. தாயில்லாக் குழந்தைகளைப் பார்த்த அவருக்குத் துயரம் நெஞ்சைத் துளைத்தது. வீட்டில் உட்கார்ந்திருப்பது என்றால் அவருக்குப் பிடிக்கவே யில்லை. வீட்டின் ஒவ்வொரு பொருளும் அவரைக் கடிக்க வருவது போலத் தோன்றியது. இந்தக் கஷ்டங்களிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்வதற்காக அடிக்கடி அவர் ராமலாலின் வீட்டுக்குப் போகத் தொடங்கினார். பத்தினியைப் பிரிந்தவர், பணத்துக்கு அதிஷ்டான தேவதையான லக்ஷ்மியைப் பிரிந்தவர் இருவரும் தங்கள் தங்கள் துயரத்தை ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொண்டனர்; வேதனைச் சுமையை இறக்கிக் கொள்ள எண்ணி ஒருவரை ஒருவர் தேற்றிக் கொண்டனர்.

சில நாட்களுக்குப் பிறகு மாதவப் பிரஸாத் தம் மனைவியின் இரண்டு புகைப்படங்களை 'என்லார்ஜ்' செய்வித்து ஒன்றைப் படுக்கையறையிலும் மற்றொன்றை ஹாலிலும் மாட்டச் செய்தார். மனைவி உயிருடன் இருந்தவரை அன்பு உணர்ச்சி மேலிட்டிருந்தது. அவள் மறைந்ததும் சிரத்தை உணர்ச்சி மேலிட்டது. அதன் காரணமாக மாதவப் பிரஸாத் இரண்டு விலையுயர்ந்த ஹாரங்கள் செய்யச் சொல்லி ஒவ்வொரு படத்துக்கும் அணிவித்தார். அவர் அடிக்கடி தம் மனைவியின் புகைப் படத்தைப் பார்ப்பார். பார்க்கும்பொழுதெல்லாம் அவர் கண்களில் நீர் முத்தாகக் கோத்து நிற்கும். அடுத்த வினாடியே அவர் மனம் மிக்க வேதனையில் ஆழ்ந்துவிடும். மனச் சுமையை இறக்குவதற்காக அவர் நெடுமூச்சு விடுவார். அந்த மூச்சுக் காற்று அந்தப் படத்தையே சுற்றிச் சுற்றி வட்டமிடும்.

ஆகா! எத்தகைய அபூர்வமான காதல்! என்ன அற்புதமான அன்பு! பார்ப்பவர்கள் அதை யெல்லாம் கண்டு பிரமித்துப்



போவார்கள். "அன்பு என்றால் இப்படியல்லவா இருக்க வேண்டும்? கடவுள் இந்தக் காதல் ஜோடியை ஏன்தான் இப்படிப் பிரித்தாரோ?" என்பார்கள். உலக இயல்பை உணர்ந்த சில அநுபவசாலிகள், "இதெல்லாம் சுத்தப் பைத்தியக்காரத்தனம். காலத்தின் கோலம். உலகம் மாறிக்கொண்டே வருகிறதல்லவா? அதனால்தான் இந்தமாதிரிப் பித்துக்குளித்தனம் எல்லாம் செய்யத் தோன்றுகிறது. இன்னும் கொஞ்ச நாட்கள் போனால் இந்த அன்பும் காதலும் இருக்கிற இடம் தெரியாமல் மறைந்துவிடும். தொன்றுதொட்ட நாளாக—அதாவது நாங்கள் பார்க்கும் நாளாக இப்படித்தான் நடந்து வந்திருக்கிறது. இப்படித்தான் இனியும் நடக்கும்" என்பார்கள்.

அன்று மாதவப் பிரஸாதின் மனம் ஒரு நிலையில் இல்லை. உள்ளத்தை ஏதோ வேதனை வாட்டி வதக்கி எடுத்துக் கொண்டிருந்தது. அவரால் வீட்டில் உட்கார்ந்திருக்க முடியவில்லை. எனவே, மனத்தில் உள்ள துயரச் சுமையை இறக்க எண்ணி ராமலாலின் வீட்டை நோக்கி நடந்தார்.

ராமலாலின் வீட்டுக்குள் நுழைந்ததும் அவர் முதன் முதலாகச் சந்தித்தது மனோரமாவைத்தான். அன்று மனோரமாவின் முகம் தாமரையென மலர்ந்திருந்தது. அவள் கட்டுக்கடங்காத களிப்பில் குளித்துக் கொண்டிருந்தாள் என்பதை அவளுடைய பளிச்சிடும் கண்கள் எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தன. அவள் முகத்தில் எப்பொழுதும் தோய்ந்திருந்த கம்பீர பாவம் கலைந்து சஞ்சல சுபாவம் தாண்டவமாடிக் கொண்டிருந்தது. அவள் கால்கள் தரையில் பாவவில்லை. மான்போல வீட்டுக்குள்ளேயே துள்ளித் திரிந்து கொண்டிருந்தாள். அவள் உதடுகளிலிருந்து சிரிப்பு வெளியே வரத் துடி துடித்துக் கொண்டிருந்தது. வார்த்தைக்கு வார்த்தை, பேச்சுக்குப் பேச்சு அவளுக்குச் சிரிக்க வேண்டும் போலத் தோன்றியது. ஆனால் அதை அவள் அடக்க முயன்றாள். இருந்தாலும் அவளையும் மீறிச் சிரிப்பு வெளி வரத்தான் செய்தது.

அவள் மாதவப் பிரஸாதினிடம் அன்று வரை பேசியதில்லை. மாதவப் பிரஸாத் வந்தாலும் ராமலால் சுபத்திரா இவர்களுடன் பேசிவிட்டுப் போய் விடுவார். மாதவப் பிரஸாதினிடம் பேசவேண்டி ஏற்பட்ட சந்தர்ப்பங்களில் எல்லாம் கூட மனோரமா அவருடன் பேச்சுக் கொடுத்ததில்லை.

ஆனால் அன்று மட்டும் என்னவோ அவளிடம் அடையாளம் தெரியாத ஒரு மாறுதல் உண்டாகியிருந்தது. முகத்தில் முல்லை முறுவல் தாண்டவமாட, அவள் மாதவப் பிரஸாதை வரவேற்று உபசரித்தாள். பிறகு தன் தந்தையைக் கூப்பிட உள்ளே ஓடினாள்.

அவளுடைய அந்தச் செய்கை துயரம் தோய்ந்திருந்த மாதவப் பிரஸாதின் மனத்துக்குச் சற்றுப் பிடித்திருந்தது. மனோரமாவின் தலை மறைந்ததும் அவர் தம் மனத்துள், "மனோரமா ரொம்ப நல்ல பெண். குணத்திலும் தங்கமானவள். பேச்சிலும் பலே கைகாரி. என்ன இனிமையாகப் பேசுகிறாள்!" என்று சொல்லிக் கொண்டார்.

சிறிது நேரத்துக்கெல்லாம் ராமலால் உள்ளிருந்து வெளியே வந்து மாதவப் பிரஸாதின் அருகில் உட்கார்ந்து கொண்டார்.

"மன்னி இல்லையா, என்ன?" என்று கேட்டார் மாதவப் பிரஸாத்.

"இல்லை, இதோ வந்து விடுவாள்!" என்று பதில் அளித்தார் ராமலால்.

"எங்கே போயிருக்கிறாள்?"

"நம் பக்கத்து வீட்டில் இருக்கிறாரே, அவர் பெயர் என்ன? — நெஞ்சில் இருக்கிறது. வரமாட்டேன் என்கிறது. அவருடைய அண்ணா பிள்ளை பரீட்சையில் தேறி விட்டானாம். அதை விசாரித்து வாழ்த்துக் கூறிவிட்டு வரப் போயிருக்கிறாள். பையன் பலே கெட்டிக்காரன். ரொம்ப நல்லவன். உங்களுக்குத் தெரியுமல்லவா?" என்று கேட்டார் ராமலால்.

"யார் அந்தப் பையன்?"

"அவன் பெயர் சுதாகர். கேள்விப்பட்டிருக்கிறீர்களோ?"

சுதாகர் என்ற பெயரில் யாருக்காவது கவர்ச்சி இருக்க வேண்டும் என்றால், சுதாகர் என்று பெயருள்ள அந்த மனிதனுக்கு இருக்க வேண்டும். அல்லது, அந்தப் பெயரில் ஆசையுள்ளவர்களுக்கு இருக்க வேண்டும். சம்பந்தம் இல்லாத பிறருக்கு இருக்க நியாயம்?

சுதாகர் என்ற பெயரை ராமலால் சொன்னதுதான் தாமதம்; பக்கத்தில் நின்று கொண்டிருந்த மனோரமா தன் முந்தானையைச் சரி செய்து கொண்டு நாணிக் கோணிக் கொண்டு நின்றாள். மனோரமாவின் அந்தச் செய்கையைக் கண்ட மாதவப் பிரஸாதுக்குத் தமது பழைய குடும்ப வாழ்க்கை நினைவு வந்தது. மனைவியின் நினைவு வந்தது. மனைவியுடன் வாழ்ந்த அந்த ஆனந்த வாழ்வு நினைவு வந்தது. அவளுடன் அநுபவித்த இன்பம் நினைவு வந்தது. இப்படி நினைவுகளுக்கு மேல் நினைவுகளாக எழுந்த நினைவுகள் எதேச்சையாக, காலஞ்சென்ற அவருடைய மனைவி—மனோரமா இருவருடைய எழிலையும் ஒப்பிட்டுப் பார்க்கும் அளவுக்கு அவர் உள்ளத்திலே நினைவுகளைக் கிளறி விட்டுவிட்டன. அவர் தம்மை மறந்து அந்த நினைவில் ஈடுபட்டு விட்டார்.

"ஆமாம். ஒருவேளை பையனையே பார்த்திருக்கிறேனோ என்று கூட நினைக்கிறேன். பையன் நல்லவன்தான். ஏழைக் குடும்பத்துக்கு உதவி செய்யக் கூடியவன். ஊன்றுகோலாக விளங்கக் கூடியவன். ஏனென்றால் அவன் சித்தப்பாவின் நிலைமை ஒன்றும் அவ்வளவு நன்றாயில்லை என்று நினைக்கிறேன்" என்றார் மாதவப் பிரஸாத்.

அவருடைய அந்தக் குரலில் பணச் செருக்கும் திமிரும் இலேசாகத் தொனித்தன.

# குதூகலமாக விழித்தெழ

## ஒரு பேவர்-லூபா ஜாஸ் அலாரம்




நெ. 8445 சாதாரண டயல் ரூ. 33/-
நெ. 8445 ரேடியம் டயல் ரூ. 34/8

பேவர்-லூபா & கோ. லிட்., பம்பாய் & கல்கத்தா

ஒரு மனிதனுடன் இன்னொரு மனிதனை ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது பணக்கார மனிதனின் கண்—கருத்து எல்லாம் பணத்தில்தான் முதலில் செல்லுவது வழக்கம். பணம் படைத்த மாதவப் பிரஸாதும் அதற்கு விதிவிலக்கானவர் அல்லவே!

மாதவப் பிரஸாத் சொன்னதற்கு ராமலால் ஒன்றும் பதில் சொல்லவில்லை. ஆனால் மனோரமாவின் புருவங்கள் அதைக் கேட்டதும் நெரிந்தன. அதைக் கண்ணுற்ற மாதவப் பிரஸாதுக்கு அவளுடைய அந்தப் புருவ நெளிப்பிலே அலாதி சௌந்தர்யம் இருப்பதாகத் தோன்றியது. அவருக்கு அந்த வீட்டை விட்டு எழுந்திருந்து செல்லச் சீக்கிரம் மனம் வரவில்லை. அதனால் அங்கே வெகு நேரத்தைப் போக்கினார். அதுமட்டும் அல்ல; வாய் ஓயாமல் பேசவும் பேசினார். தம் பங்களா, வண்டி, குதிரை ஒன்றுவிடாமல் வர்ணித்தார். தாம் பிரமுகர்களைச் சந்திக்கச் செல்வது, பிரமுகர்கள் தம்மைச் சந்திக்க வருவது, மாபெரும் கூட்டங்களில் தாம் கலந்து கொள்வது, கானசபை, நாட்டிய அரங்கம், நாடக சங்கம் ஆகியவற்றில் தாம் பங்கெடுத்துக் கொள்வது போன்ற ஒவ்வொரு விஷயங்களையும் பற்றிப் பிரமாதமாக அளந்தார். கேட்போர் கண்களிலே தம்மைப் பற்றிய பெருமைச் சித்திரம் வெகு நேர்த்தியாக வரையப்பட்டு, நிலைத்து நிற்க வேண்டும் என்ற சபலம் அவருக்கு இருக்கிறதோ என்று தோன்றும்படி பேசினார். அவர் பேசிக் கொண்டு போவதைப் பார்த்தால் அவருடைய வீரதீரப் பிரதாபங்களின் வர்ணனை ஓயாது போலவே தோன்றியது.

அவர் அப்படிப் பேசிக் கொண்டிருக்கும் பொழுதுதான், வெளியில் போயிருந்த சுபத்திரா வந்து சேர்ந்தாள். அவள் வந்ததும் வராததுமாக, "சுதாகரின் சித்தப்பாவுக்கு மாற்றலாகிவிட்டதாம். பக்கத்து வீட்டார்கள் நல்லவர்களாக இருந்தார்கள். என்ன செய்வது? இனிமேல் பக்கத்து வீட்டுக்கு வேறு யார் வரப்போகிறார்களோ?" என்றாள்.



மனைவி:—குழந்தைமேலே சரிந்து விழாதேங்கோ! ராஜாஜியின் புதிய கல்வித் திட்டப்படி அது உங்களுக்கு உதவி செய்யத்தான் வருகிறது!

அதைக் கேட்டதும் மனோரமாவின் முகம் களையிழந்து சோபையிழந்து காணப்பட்டது. சித்தப்பாவுக்கு மாற்றல் ஆகாவிட்டால், சுதாகர் இங்கேயே இருப்பான். இங்கேயே இல்லாவிட்டாலும் அடிக்கடி இங்கே வந்து போய்க் கொண்டாவது இருப்பான். இனிமேல் அவன் இந்த ஊருக்கு எதற்காக வரப் போகிறான்? வருத்தம் சூழ்ந்த முகத்துடன் மனோரமா அவ்விடத்தை விட்டுத் தன் அறையை நோக்கி நடந்தாள். மாதவப் பிரஸாதும் வந்து வெகு நேரம் ஆகிவிட்டது. எவ்வளவு நாழிகைதான் இன்னொருவர் வீட்டில் அவர் உட்கார்ந்திருப்பது? எனவே, அவரும் அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு தம் வீட்டுக்குப் புறப்பட்டார்.

வீட்டுக்கு வந்து பார்த்தால், தினத்தைக் காட்டிலும் வீடு வெகு மோசமாகியிருந்தது. நாளுக்கு நாள் சகிக்க முடியாத அவலநிலைமையை அடைந்து கொண்டிருந்தது அவருடைய வீடு. குழந்தைகள் சாப்பிடாமலேயே மூலைக்கு ஒன்றாய்ப் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தன. வேலைக்காரர்கள் ஒன்று கூடி உட்கார்ந்து ஊர் வம்பு பேசிக் கொண்டிருந்தார்கள். கொஞ்ச தூரத்தில் பெரிய பாத்திரத்தில் கறந்து வைத்திருந்த பாலைப் பூனை பயம் இல்லாமல் ஆற அமர ருசி பார்த்துக் குடித்துக் கொண்டிருந்தது.

குதிரை வண்டி ஓட்டுவதற்காக அமர்த்தப்பட்டிருந்த வேலைக்காரன் பிறருக்குத் தெரியாமல் போதை தரும் பானத்தை அருந்திவிட்டு, அந்த வெறியில் தன் பெண்சாதியை அடித்துக் கொண்டிருந்தான். சிறிது நேரம் அவன் மனைவி அவனுடைய அட்டகாசத்தைப் பொறுத்துப் பார்த்தாள். வர வர அவன் அட்டகாசம் அதிகரிக்கவே, அவளுக்குத் தாங்கவில்லை. அவனை ஒரு கட்டிலில் கட்டிப் போட்டுவிட்டு மாதவப் பிரஸாதிடம் நியாயம் கோரி வழக்குத் தொடுக்க வந்து சேர்ந்தாள். குழந்தைகளைப் பார்த்துக் கொள்வதற்காக நியமிக்கப் பட்டிருந்த செவிலித்தாய் பகவான் மீது குழந்தைகளின் பொறுப்பைச் சுமத்தி விட்டு எங்கேயோ போயிருந்தாள். மாதவப் பிரஸாத் வீட்டுக்கு வந்துவிட்ட செய்தி குருவிக்கு மூக்கில் வியர்த்த கதையாகத் தெரிய வரவே, பறந்து விழுந்து கொண்டு வந்து சேர்ந்தாள். அது மட்டும் அல்ல; அப்பொழுதுதான் ஏதோ அவசர ஜோலியாக அந்தண்டை போய் வந்ததாகச் சாக்கு வேறு சொன்னாள்.

இதையெல்லாம் கண்ட மாதவப் பிரஸாத் மனம் கலங்கினார். இதென்ன குடும்பம்! அட கடவுளே! இப்படியா அவருடைய குடும்பம் நாதியற்றுக் கேட்பார் அற்றுத் தவிக்க வேண்டும்? அவருக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. "இந்த வீட்டில் வேலை

பார்க்கும் ஒவ்வொருவரும் நன்றி கெட்டவர்கள். உண்ட வீட்டுக்கு இரண்டு நினைப்பவர்கள். எல்லோரையும் வேலையிலிருந்து நீக்கி விட்டுத்தான் மறு காரியம் பார்க்கப் போகிறேன். என்னை யாரென்று எண்ணினீர்கள்? துடைகாலிகளே!'' என்று ஆத்திரம் தீர வாயில் வந்தபடியெல்லாம் கத்த ஆரம்பித்து விட்டார்.

எஜமானரின் கோபத்தையும் குமுறலையும் கண்ட எல்லோரும் வாய் அடைத்துப் போய்ச் சொல்லாமல் கொள்ளாமல் அவர் அவர்கள் வேலையைக் கவனிக்க நழுவி விட்டார்கள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அறையைச் சுத்தம் செய்து சீர்திருத்திக் குழந்தைகளுக்குப் படுக்கை போட்டு, அவற்றைப் படுக்கையில் தூக்கிப் போட்டு விட்டு வேலைக்காரி மாதவப் பிரஸாதைச் சாப்பிடக் கூப்பிட வந்தாள். மாதவப் பிரஸாதின் உதடுகள் அப்பொழுதும் ஆத்திரத்தால் துடித்துக் கொண்டிருந்தன. கண்கள் சிவந்திருந்தன.

அதைக் கண்டு அந்த வேலைக்காரி சிறிதேனும் அஞ்சவில்லை. அவள் கண்களில் கவர்ச்சிகரமான ஒரு ஒளி பளிச்சிட்டது. உதடுகளில் புன்னகை தெளிந்தது. அவள் வெகு லாகவமான நடை போட்டுக் கொண்டு மாதவப் பிரஸாதின் அருகில் வந்து மன்னிப்புக் கோரினாள். அதுமட்டும் அல்ல; அவருடைய ஆத்திரம் கோபம் இவற்றைச் சிறிதும் பொருட்படுத்தாமல் 'சாப்பிட வந்துதான் ஆகவேண்டும்' என்று பிடிவாதம் பிடித்து அழைத்தாள். மாதவப் பிரஸாதின் மனைவிகூட அவ்வளவு பிடிவாதம் பிடித்துச் சாப்பிடக் கூப்பிட்டிருக்க மாட்டாள்.

இந்த வேலைக்காரிக்கு இவ்வளவு அக்கறையும் அன்பும் எங்கிருந்து வந்தன? என்ன நடை! என்ன நடிப்பு! மாதவப் பிரஸாதின் நிமிர்ந்த கண்கள் மனைவியின் படத்தைப் பார்த்தன. அந்தப் படம் அவரைப் பார்த்துச் சிரிப்பது போலிருந்தது. அந்தப் படத்திலிருந்து கண்களை அகற்றினார். அடுத்த கணம் மனோரமா அவருடைய கண்களில் புகுந்தாள்.

''அப்படியானால் மறுபடியும் கல்யாணம் செய்து கொண்டால் என்ன?''—மாதவப் பிரஸாதின் மனத்திலே கேள்வி முளைத்தது.

எதிரே சுவரில் படமாக மாட்டப்பட்டிருந்த அவருடைய மனைவி சிரித்துக்கொண்டிருந்தாள். பக்கத்திலே நின்று கொண்டிருந்த வேலைக்காரி சிரித்துக் கொண்டிருந்தாள். ஆனால் இவ்வளவையும் தாண்டி மாதவப் பிரஸாதின் கண்களிலே, பருவத்தை தெரித்துக் கொண்டு நின்ற மனோரமாவின் உருவம் புகுந்து நிறைந்துக் கொண்டு விட்டது.

ஆரம்பத்தில் கல்யாணம் என்ற பேச்சை எண்ணினாலே அவரை வெட்கம் பிடுங்கித் தின்றது. என்ன நேர்ந்தாலும் தாம் மறுமணம் செய்து கொள்வதில்லை என்று அவர் தம் மனைவிக் கெதிரே கூட எத்தனையோ தடவை ஆணையிட்டுக் கூறியிருக்கிறார். அதைக்



''கறுப்புப் பெண்களைத் தான் கல்யாணம் செய்து கொள்ளவேண்டும் என்று ராஜாஜி வாலிபர்களுக்குப் புத்தி சொல்லி இருக்காரே......!''

''அதைப் பற்றி உங்களுக்கு ஏன் இவ்வளவு கவலை?''

''நம்முடைய முகப் பவுடர், ஸ்நோ வியாபாரத்தைப் பாதிக்கப் போகிறதே என்றுதான்!''

கேட்ட அவர் மனைவி இலேசாகச் சிரித்து, ''இதெல்லாம் எங்கேயாவது நடக்கக் கூடிய காரியமா? இந்தச் சபதம் எல்லாம் வெறும் வாய்ப்பேச்சாக முடியுமே ஒழியக் காரியத்தில் நடைபெறாது'' என்று சொல்லியிருக்கிறாள். அவள் சொன்னதில்தான் எவ்வளவு உண்மை! அவள் கண் மூடியதும் இங்கே மறுமணம் செய்து கொள்ளவேண்டும் என்ற எண்ணம் அல்லவா எழுந்து விட்டது! அப்படிச் செய்து கொள்வது காலஞ்சென்ற மனைவிக்கு அநீதி இழைப்பதாகும் என்று அவருடைய மனமே அவரைக் குத்திக் காட்டியது. குழந்தை குட்டிகள் இருக்கின்றன. அப்புறமும் மறுமணம் எதற்கு? இந்த எண்ணம் உள்ளத்தில் இடம் பெற்றதுதான் தாமதம்; மறுமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற தீய எண்ணம் நம் உள்ளத்தில் உதித்ததே தவறாயிற்றே என்று மிக மிக மனம் வருந்தத் தொடங்கி விட்டார்.

''நான் இன்று சாப்பிடப் போவதில்லை. லக்ஷ்மி, நீ போ!'' என்று குழந்தைகளைக் கவனித்துக் கொள்வதற்காக நியமிக்கப்பட்டிருந்த வேலைக்காரியிடம் சொன்னார் மாதவப் பிரஸாத். அப்பொழுது அவர் மனம் தனிமையை நாடியது.

''ஐய்யய்ய! தினமும் என்ன இப்படிச் சொல்றீங்க? தினமும் இப்படிப் பட்டினி போட்டால் உடம்பு என்னத்துக்கு ஆகும்? உடம்பையும் கவனித்துக் கொள்ளுங்க!''—வேலைக்காரி உப்புத் தின்றதற்குத் தன் கடமையைத் தீர்க்க எண்ணி வற்புறுத்தினாள்.

லக்ஷ்மி சிவந்த மேனி படைத்தவள் அல்ல. ஆயினும் அவளுடைய அங்க அவயவங்களின் அமைப்பு அழகாக அமைந்திருந்தது. அவள் உடல் உறுதி உள்ளவள், தேக ஆரோக்கியம் கொண்டவள் என்பதை அவளுடைய முகத்தின் இயல்பான கவர்ச்சி எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தது. அவள் யாரையாவது பார்த்தால், அவள் பார்ப்பது அவர்களுக்குப் பிடிப்பதில்லை என்பதில்லை.

அவளைப் பார்க்க வேண்டாம் என்ற எண்ணமும் யாருக்கும் எழுந்ததில்லை. ஆகவே, அவள் அழகில் அரம்பையாக இல்லா விட்டாலும் பார்ப்பதற்குப் படுமோசமானவளாக இல்லை.

"என் உடம்பைப் பற்றி நீ கவலைப் பட வேண்டாம். சமையற்காரனிடம் எனக்குப் பால் மட்டும் கொண்டு வந்து கொடுக்கச் சொல். உனக்குக் கொடுத்த வேலை குழந்தைகளைக் கவனித்துக் கொள்வது. அதைப் போய்ச் சரியாகச் செய்!" என்று கடுமையாக உத்தரவிட்டார் மாதவப் பிரஸாத்.

லக்ஷ்மி பதில் பேசாமல் அங்கிருந்து சென்று விட்டாள். மாதவப் பிரஸாத் மறுபடியும் சிந்தனையில் ஆழ்ந்தார். சிறிது நேரத்துக்கெல்லாம் லக்ஷ்மியே கையில் பால் பாத்திரத்துடன் அங்கே வந்து சேர்ந்தாள். மாதவப் பிரஸாதின் மனத்திலே ஒரு பீதி முளைத்தது. இவள் எதற்காக அடிக்கடி என்னைத் தேடி வருகிறாள்? அதன் காரணத்தைக் கற்பனை செய்து பார்த்த மாத்திரத்திலேயே அவர் உள்ளம் குலுங்கியது; உடல் நடுங்கியது.

"சமையற்காரரைக் காணோம். அதனால் தான் நான் கொண்டு வந்தேன்!" என்று கூறி லக்ஷ்மி பால் பாத்திரத்தை நீட்டினாள். அப்பொழுது அவள் கைகள் மாதவப் பிரஸாதின் கைகளைத் தீண்டின. அவள் வேண்டியதும் அதுதானே? எனவே, எவ்வளவு நேரம் முடியுமோ, அவ்வளவு நேரம் அவர் கைகளில் தன் கைகளைப் படுமாறே வைத்திருந்தாள். அதுமட்டும் அல்ல; மாதவப் பிரஸாதின் மனத்திலே எத்தகைய உணர்ச்சி குமிழியிடுகிறது என்பதைப் பார்ப்பதற்காகச் சிரித்த உதடுகளுடன் வைத்த கண் வாங்காமல் அவரையே பார்க்கலானாள். மாதவப் பிரஸாதின் நெற்றியிலே வியர்வை துளித்தது.

உலகம் ரொம்ப நல்லது. இதில் சந்தேகம் இல்லை. உலகத்தில் வாழும் மனிதர்களும் நல்லவர்கள்தான். இதிலும் சந்தேகம் இல்லை. ஆனால் சூழ்நிலையின் சக்திதான் அபூர்வமானது. அது மகாத்மாவைக் கொலையாளியாகவும், கொலையாளியை மகாத்மாவாகவும், தீய ஒழுக்கங்கள் கொண்டவனை நல்லொழுக்கம் கற்பிக்கும் நல்லாசிரியனாகவும் நல்லொழுக்கங்கள் படைத்தவனைத் தீய ஒழுக்கத்தின் நாயகமானவனாகவும் ஆக்கிவிடக் கூடியது. மாதவப் பிரஸாத் நல்ல மனம் படைத்தவர். எனவே, ஆண்கள் நீச் செயல்களில் இறங்குகிறார்கள் என்பதில் அவருக்கு நம்பிக்கை கிடையாது. ஆனால் லக்ஷ்மியின் நடத்தை அவருக்குப் புரியாப் புதிராக இருந்தது.

"இன்று உங்களுக்கு உடல் நலம் சரியில்லையா, என்ன?" என்று கேட்டாள் லக்ஷ்மி.

"இல்லை. அதெல்லாம் ஒன்றும் இல்லை"—மாதவப் பிரஸாத் சுருக்கமாகப் பதில் சொன்னார். அதைச் சொல்லியவாறே பக்கத்திலிருந்த விளக்கைப் பெரிதாக்கினார். ஒளி அதிகமாகி விட்டால் துணிவு அதிகமாகாது என்ற எண்ணம் அவருக்கு. அதனால்தான் அப்படிச் செய்தார். அவர் தம் மனத்தை அடக்க முயன்றார். முகத்திலே கடுமையை வரவழைத்துக் கொள்ள முயன்றார்.

அதைக் கண்ட லக்ஷ்மி சிரித்தாள். அவள் சிரிப்பில் அப்படி என்ன வைத்திருந்தது?

'அவளைக் கல்தா கொடுத்து வெளியே தள்ளினால் என்ன?' என்ற எண்ணம் மாதவப் பிரஸாதின் மனத்திலே எழுந்தது. ஆனால் அவரோ நல்ல நோக்கமும் பெருந்தன்மையும் படைத்த மனிதர். பெருந்தன்மையும் நல்ல நோக்கமும் படைத்தவர்களின் உள்ளம், தீய நோக்கமும் சிறு புத்தியும் படைத்தவர்களைக் காட்டிலும் எத்தனையோ மென்மையானது; கடினம் என்பதையே அறியாதது. எனவே உள்ளத்தில் எழுந்த அந்தக் கொடும் உணர்ச்சியை அவரால் செயலாக்க முடியவில்லை.

பாலைக் குடித்து விட்டுப் பாத்திரத்தை லக்ஷ்மியின் கையில் கொடுத்தார். லக்ஷ்மி அவ்விடத்தை விட்டுச் சீக்கிரம் போகிறவளாகத் தோன்றவில்லை. பால் பாத்திரத்தைக் கீழே வைத்துவிட்டு, மிகவும் இனிமையான குரலில், "தலையை வேண்டுமானால் பிடிக்கட்டுமா?" என்று கேட்டாள்.

அதைக் கேட்ட மாதவப் பிரஸாத் கலங்கி விட்டார்; நடுங்கி விட்டார்; பயந்து விட்டார். அவருடைய உள்ளத்திலே போர் மூண்டது. அவரால் தம் உள்ளத்திலே எழுந்த போரை அடக்க முடியவில்லை. இது என்ன இரகசாரம்? 'பிடி' என்றும் சொல்ல முடியவில்லை; பிடிக்க வேண்டாம் என்றும் சொல்ல முடியவில்லை. விழுங்கவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் தத்தளிக்கும் மூஞ்சூறை விழுங்கிய பாம்பாகத் தத்தளித்தார்.

லக்ஷ்மி அவர் அருகில் வந்து தலையில் கை வைத்துப் பிடிக்கத் தொடங்கி விட்டாள். மாதவப் பிரஸாதின் மனம் நெகிழ்ந்து கொடுத்தது; உள்ளம் உருகத் தொடங்கியது.

இதே சமயம் பக்கத்துஅறையில் படுத்து உறங்கிக் கொண்டிருந்த குழந்தை வீறிட்டு அழுதது. அப்பொழுது லக்ஷ்மி அவருடைய தலையைப் பிடித்துக் கொண்டிருந்தாள். குழந்தையின் அழுகை அவருடைய மனத்தை ஒரு நிலைக்குக் கொண்டு வந்து நிறுத்தியது.

"இங்கே உட்கார்ந்திருக்கிறாயே? குழந்தை அழுகிறதே! காது கேட்கவில்லை? செவிடா, நீ?" என்று லக்ஷ்மியின்மேல் நெருப்பாக எரிந்து விழுந்தார் மாதவப் பிரஸாத்.

அவருடைய ஆத்திரத்தை அறிந்த லக்ஷ்மி வாய் பேசாமல் எழுந்து சென்றாள். மாதவப் பிரஸாத் படுக்கையில் சாய்ந்தார். அவர் மண்டையை 'விண், விண்' என்று தெறிக்கத் தொடங்கியது.

"மறுபடியும் கல்யாணம் செய்து கொள்ளத்தான் வேண்டும்!" என்ற சொற்கள் அவருடைய வாயிலிருந்து முணுமுணுப்பாக வெளியே வந்தன.

(தொடரும்)

LO/G/2



# அம்மாவும் நானும் விரும்புவது....

உலகத்திலேயே குழந்தைகளுக்கேற்ற ஆகாரங்களைத் தயாரிப்பதில் கைதேர்ந்தவர்களான நெஸ்ல்ஸால் தயாரிக்கப்பட்ட லாக்டோஜனே யாகும். என் தாயார் அதை விரும்புவதற்குக் காரணம் அதில் விடமின்களும், இரும்புச் சத்துக்களும் சேர்ந்திருப்பதேயாகும். விடமின் 'A' சரீரத்தை சீக்குகளிலிருந்து பாதுகாப்பதற்கும், விடமின் 'D' நல்ல பற்கள் வளருவதற்கும், இரும்புச் சத்துக்கள் இரத்த புஷ்டிக்கும், சிறந்தது.

நான் லாக்டோஜனை விரும்புவதற்குக் காரணம், அது ருசியுள்ளதாயிருப்பதுடன், எளிதில் ஜீரணமாகி விடுகிறது. மேலும் இதை சீக்கிரமாக தயாரிக்க முடிவதால், பசித்தவுடன் சாப்பிட முடிகிறது. என் சிநேகிதர்கள் எல்லோரும் லாக்டோஜனை விரும்புகிறார்கள். இந்த ஒரு விஷயத்தில் நான் அவர்களுடைய தாயார்களும், அவர்கள் சொன்னதை சரி என்கிறார்கள்.




NESTLE'S **LACTOGEN**

குழந்தைகளுக்குச் சிறந்த ஆகாரம்.

எங்களுடைய இலவச லாக்டோஜன் புஸ்தகத்தை படியுங்கள். இந்தக் கூபனில் உங்களுடைய பெயரையும், முழு விலாசத்தையும் எழுதி

நெஸ்ல்ஸ் பிராடக்ட்ஸ் (இந்தியா) லிட்.,

தபால் பெட்டி 180, மதராஸ்.

என்ற விலாசத்திற்கு இன்றே போஸ்ட் பண்ணுங்கள்.



பெயர்........................................

விலாசம்........................................

........................................

அதிக
வெண்மையான
பற்கள் சுத்தமான
வாய்

**COLGATE**
RIBBON DENTAL CREAM

ஒளிவீசும் புன்னகைகள் கோல்கேட் புன்னகைகள்

---




**ட்ரான்ஸ்பெரன்ட் காகிதம்**
**பாதுகாப்புக்கும், அழகுக்கும்,**
**குறைந்த செலவிற்கும்!**



மிட்டாய்கள், சோப்புகள், விளையாட்டுச் சாமான்கள், புகையிலை, வாசனைத் திரவியங்கள், அணிமணிகள், உலர்ந்த உணவுகள், பழங்கள் முதலியவைகளை பாக்கிங்செய்ய ஏற்றது. 2விதங்களில் கிடைக்கிறது. நிறமற்றது & அம்பர்-500 தாள்கள் (20"X30") கொண்ட ரீம்களில். நிறமற்றது ரீம் ஒன்றுக்கு விலை ரூ. 44. அம்பர் ரீம் ஒன்றுக்கு விலை ரூ. 51/8/.









வியாபார விவரங்களுக்கு:
தி திருவாங்கூர் ரேயான்ஸ் லிமிடெட்
ரேயான்புரம் போஸ்ட்,
வடக்கு திருவாங்கூர்
மேனேஜிங் ஏஜெண்ட்கள்:
எம்பீயு & லவ்ஸ் (திருவாங்கூர்) லிட்.



TR 3653




**பா**னு கல்யாணத்துக்கு முன்பே மகா பிடிவாதக்காரி என்று பெயர் வாங்கியவள். தான் நினைத்ததைச் சாதித்துக்கொள்ளும் குணம் படைத்தவள். மூன்று பின்ளைக் குழந்தைகளுக்கிடையே பிறந்த ஒரே பெண்ணுனதால் தாய் தந்தையரிடத்திலே அவள் சொல்லுக்கு ஒரு ஏற்றம் இருந்தது.

அவள் அதிர்ஷ்டத்தை என்னவென்று சொல்ல! அவள் வைத்தது சட்டமாக இருக்கக்கூடிய புக்ககமும் கிடைத்தது. முகம் கோணினுலும் மனம் தாளாத புருஷன் கிடைத்தான். எனவே எல்லா விதத்திலும் அதிர்ஷ்டக்காரியான பானுவின் அகம்பாவம் அதிகரித்தது.

ஆனுல் காலம் ஒரே தினுசாக இருக்கமுடியுமா! வெளுத்த வானம் கறுக்கும், கறுத்த வானம் வெளுக்குமல்லவா! அது இவர்கள் விஷயத்தில் மட்டும் இயற்கைக்குப் புறம்பாக விட்டுக் கொடுக்குமா, என்ன!

அன்றைக்குக் கணேசன் ஆபீஸுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தான். பானுவும் அவனுக்குப் பின்னுடியே வந்து, "என்ன! இன்றைக்கு நினைவாக வாங்கி வருகிறீர்களா!" என்று சிரித்த முகத்துடன் கேட்டாள்.

"என்ன வாங்கி வரவேண்டும்!"

"இதுதானே உங்களிடம் வேண்டாமென்கிறேன். நேற்றைக்கே குஷால்தாஸ் கடையில் வெளியில் தொங்க விட்டிருக்கும் ஜார்ஜெட் புடவையைக் காண்பித்து அந்தமாதிரி புடவை வேண்டும் என்றேன். நீங்கள்கூட இப்பொழுது கடைக்குள் போனுல் நாழியாகி விடும். நாளை ஆபீஸ் போகும் பொழுது ஞாபகப்படுத்து. வாங்கி வருகிறேன் என்று சொன்னீர்களே! மறந்து விட்டீர்களா! கோடுபோட்ட ஜார்ஜெட்டில் ஆறு கெஜம் வாங்கிக் கொண்டுவாருங்கள். அப்படியே தலைக்குக் கொண்டை போட்டுக் கொள்வதற்குப் பாசிமணி கோத்த வலையும் வாங்கி வாருங்கள்!" என்றுள்.

"ஒரு கூடையும் கையில் ஒருமுழம் கோலும் வேண்டாமா!" என்று கேட்டான் கணேசன்.

"என்ன, விளையாடுகிறீர்களா! நான் ஒன்று சொன்னுல் நீங்கள் ஒன்று சொல்கிறீர்களே! கூடையும் கோலும் எதற்கு!" என்று கோபமும் ஆச்சரியமும் கலந்த குரலில் கேட்டாள் பானு.

"ஏனென்றுல் கோடு போட்ட புடவையையும் தலைக்குப் பாசிமணி கோத்த வலையையும் போட்டுக்கொண்ட பிறகு இடுப்பில் கூடையும் கையில் ஒரு முழம் கோலும் இருந்தால் தானே அழகாக இருக்கும்!" என்றுன் கணேசன் சற்றும் சிரிக்காமல்.

பானுவுக்கு அழுகையே வந்துவிட்டது. "நேற்று வாங்கிக் கொடுக்கிறேனென்று சொன்னதினுல் தானே நான் நேற்று முழுவதும் அந்தப் புடவை ஞாபகமாகவே இருந்தேன்! இன்றைக்கு இப்படிப் பரிகாசம் பண்ணுகிறீர்களே! நன்ருக இருக்கிறதா!" என்றுள்.

"பானு! எனக்கு அந்தமாதிரி மெல்லிய புடவைகளையெல்லாம் நீ அணிந்து கொள்வதில் இஷ்டமில்லை. அவ்வளவுதானே! நேற்றெல்லாம் நினைத்துக் கொண்டிருந்தால் இன்றைக் கெல்லாம் அதை அடியோடு மறந்துவிடு!"

அவனுடைய பதிலை எதிர்பாராமலே கணேசன் விடுவிடு வென்று நடந்து வாசலுக்குப் போய் விட்டான். அவனுடைய குரலில் தொனித்த அழுத்தமும் கண்டிப்பும் பானுவைத் திகைக்க வைத்தன.

வாசலிலேயே பிரமை பிடித்தவள் மாதிரி நின்று விட்டாள். வழக்கத்திற்கு விரோதமாகக் கணேசனின் கண்டிப்பு பானுவுக்கு ஆச்சரியத்தையும் கோபத்தையும் உண்டு பண்ணிற்று. அன்று முழுதும் அவள் மனம், தன் வாழ்க்கையிலேயே முதன் முதலாக ஏற்பட்ட பெருந் தோல்வியை நினைத்து வருந்தியது.

பக்கத்து வீட்டுக் குழந்தை பிரேமா சதா பானு வீட்டோடுதான் இருப்பாள். பானுவும் அவளிடம் உயிராய் இருப்பாள். அன்று சாயங்காலம் அந்தக் குழந்தை வழக்கம்போல் பானுவிடம் ஓடிவந்து, "மாமி! மாமி! இன்னிக்குப் பள்ளிக்கூடத்திலே ஒரு புதுப் பாட்டு சொல்லிக் கொடுத்தார்கள். அதைப் பாடுகிறேன். நல்ல....!" என்று ஆரம்பிக்குமுன், "போதும் பாட்டு! சும்மாத் தொந்தரவு செய்யாதே!" என்று சீறி விழுந்தாள். பானுவின் புதுமையான இந்த நடத்தையைப் பார்த்து அந்தக் குழந்தை அப்படியே நடு நடுங்கித் தன் வீட்டிற்கு ஓடிப்போய் விட்டது.

* * *

**க**ணேசன் ஆபீஸிலிருந்து வந்தான். வழக்கம் போல் வாசலில் தலையில் கட்டுப் புஷ்பமும் முகத்தில் புன்சிரிப்பும் தவழ ஆவலோடு வழி பார்த்து நிற்கும் பானு நில்லாதது அவள் கோபமாக இருக்கிறுள் என்பதை விளம்பரப் படுத்தியது.

கணேசன் 'டக் டக்'கென்று பூட்ஸ் சத்தம் ஒலிக்க உள்ளே வருவது தெரிந்திருந்தும்கூட உள்ளே ஏதோ காரியம் இருப்பவளைப்போல் முன் பக்கம் போகாமலே இருந்தாள் பானு.

"பானு! இன்றைக்கு என்ன டிபன்!" என்றுன் கணேசன், தன் உடைகளைக் களைந்து கொண்டு. அவன் குரலிலிருந்து காலையில் நடந்தவை ஒன்றையும் சற்றேனும் நினைவு வைத்திருப்பவனுகத் தோன்றவில்லை. பானுவுக்கு மட்டும் தன் பிடிவாதத்தையும் கோபத்தையும் அவ்வளவு லகுவில் விட்டு விடுவதாக எண்ணம் இல்லை. இருந்தாலும் அவனே வலுவில் பேசவந்ததினுல் அவளால் பதில் சொல்லாமலிருக்க முடியவில்லை. ஒருவேளை தன் விஷ்டப்படி புடவை வாங்கி வந்திருக்கலாம் என்றும் ஒரு சபலம் தட்டிற்று. "இதோ டிபன் கொண்டு வருகிறேன்!" என்று சொல்லியவாறே டிபனையும் காப்பியையும் கொண்டு வந்து மேஜை மேல் வைத்தாள்.

பானு கொண்டு வந்த டிபனைச் சாப்பிட்டுக் கொண்டே, "பானு! சொல்ல மறந்து விட்டேனே! உன் அப்பா நாளைக்குக் காலை எக்ஸ்பிரஸில் இங்கு வருவதாகவும் முடிந்தால் உன்னையும்

அழைத்துப் போகலாமென்று நினைத்துக் கொண்டிருப்பதாகவும் கடிதம் போட்டிருக்கிறார்!" என்று சொல்லிவிட்டு அவள் முகத்தையே அன்பு தவழப் பார்த்தான் கணேசன்.

பானு "உம்" என்று சொல்லிவிட்டுப் பேசாமலிருந்தாள். பானுவின் எண்ணம் நினைவு எல்லாம் அந்த ஜார்ஜெட் புடவைமீதே இருந்தது. அதைப் பற்றிக் கணேசனாக வாய் திறந்து சொல்வானென்று எதிர்பார்த்தாள். பலிக்கவில்லை. அதைக் கேட்காமல் மனத்திலேயே வைத்திருந்தால் அவளுடைய நெஞ்சு படீரென்று வெடித்துவிடும் போல் அத்தனை பாரமாக இருந்தது. அதனால் கேட்டே விட்டாள். "ஆமாம்! காலையில் நான் சொன்ன ஜார்ஜெட் புடவையைப் பார்த்தீர்களோ!" என்று கேட்டாள்.

"பானு! இன்றைக்கு என்ன நீ இந்தமாதிரி யெல்லாம் பிடிவாதம் பிடிக்க ஆரம்பித்து விட்டாய்! நான் பிடிக்கவில்லை என்றால் அந்தக் காரியத்தை நீ செய்யமாட்டாயென்றல்லவா நினைத்துக் கொண்டிருந்தேன்! இந்தமாதிரி யெல்லாம் செய்தால் எனக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்காது, ஆமாம் சொல்லி விட்டேன்" என்று கோபத்தோடு சொன்னான் கணேசன்.

"நிஜமாகச் சொல்லுங்கள். இதே புடவையை என் அப்பா வாங்கிக் கொடுத்தாரானால் நீங்கள் என்னை உடுத்திக் கொள்ளச் சம்மதிப்பீர்களா, மாட்டீர்களா! உங்கள் கைக்காசைப் போட்டு வாங்குவதால்தானே ஆயிரம் சாக்குகள் சொல்லுகிறீர்கள்!" என்று படபடக்கும் குரலில் கேட்டாள். அவள் கண்களினின்றும் இரண்டு சொட்டுக் கண்ணீர் கன்னத்தில் வழிந்தது.

வாஸ்தவமாகவே கணேசனுக்கு இப்போது கோபம் எல்லை மீறிப்போய் விட்டது.

"என்ன சொன்னாய், பானு! உன் அப்பா பெரிய பணக்காரர் என்ற பெருமையில் வீணாக வார்த்தையை வளர்த்தாதே!" என்று அதட்டும் குரலில் கூறினான் கணேசன்.



"முன்பு என் அப்பா வாங்கிக் கொடுத்த புடவையை நீங்கள் ரொம்ப நன்றாக இருக்கிறது என்று சொன்னதில்லையா!" என்று பானு அவனைச் சுடச் சுட எதிர்த்துக் கேட்டு விட்டாள்.

"உன் அப்பா எதிரிலேயே 'இது எங்க அப்பா வாங்கினார். எப்படியிருக்கிறது!' என்று கேட்டால் என்ன செய்வது! 'ரொம்ப நன்றாக இருக்கிறது' என்று சொல்லி வைத்தேன்!" என்றான் கணேசன்.

"இருந்தாலும் நீங்கள் இவ்வளவு கஞ்சத்தனமாய் ஒரு ஜார்ஜெட் புடவை வாங்கக் கூட மறுப்பீர்கள் என்று நான் நினைக்கவே இல்லை. எங்க அப்பாவுடன் நான் கொஞ்ச நாள் ஊருக்குப் போய் விட்டு வருகிறேன். அப்பொழுது தெரியும் என் அருமை!" என்று விம்மியபடியே கூறினாள் பானு.

கணேசனுக்குக் கோபம் எல்லை மீறியது. "சட், அதிகப் பிரசங்கி! உன் பணக்காரத் தந்தையுடன் நீ ஊருக்குப் போய் விடு. திரும்பி இந்தக் கையாலாகாத புருஷனிடம் வரவே வேண்டாம். அங்கேயே இருந்து விடு!" என்று படபடவென்று கூறி விட்டு அங்கே நிற்காமல் வெளியே போய் விட்டான்.

பானு கட்டிலில் படுத்துக் கொண்டு மனத்தின் பாரம் குறைய மட்டும் அழுது தீர்த்தாள். இது தான் அவர்களுக்குள் வந்த முதல் சண்டையானபடியால் அதை அவளால் தாங்கவே முடியவில்லை.

அன்று இரவு சமைத்த சமையல் சாப்பிட ஆள் இல்லாமல் ஆறிப்போய் அப்படியே கிடந்தது. மணி பத்து அடித்த பிறகுதான் கணேசன் வந்து கதவைத் தட்டினான். பானு கதவைத் திறந்தாள். கணேசனின் வெற்றிலைக் காவி ஏறிய உதடுகள் அவன் வெளியில் எங்கோ சாப்பிட்டாயிற்று என்பதைப் பறைசாற்றிக் கொண்டிருந்தன. அவனும் பேசாமல் போய்க் கட்டிலில் படுத்துக் கொண்டான். அவளும் சாப்பிடாமல் படுக்கையில் படுத்துக் கொண்டாள். ஊடல் இருவர் மனதிலும் கசப்பை வளர்த்து ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்க முடியாமல் செய்து விட்டது. இருவரும் இரவு முழுதும் சரியாகத் தூக்கம் வராமல் மனம் அலைபாயத் திண்டாடிக் கொண்டிருந்தார்கள்.

*　　　*　　　*

**ம**றுநாள் காலை ஐந்தரை மணிக்கெல்லாம் கணேசன் படுக்கையிலிருந்து எழுந்து வெளியே போனான். அவன் கதவைத் திறந்து கொண்டு போன சத்தம் கேட்டுப் பானு விழித்துக் கொண்டாள். வழக்கத்திற்கு விரோதமாக ஏன் இவ்வளவு சீக்கிரம் எழுந்து விட்டார் என்று மனத்தில் நினைத்துக் கொண்டே சற்று நேரம் படுத்திருந்தாள். கணேசன் குளிக்கும் சத்தம் கேட்டது. பச்சைத் தண்ணீரில் குளிக்கிறாரே என்று எண்ணிக் கொண்டே படுக்கையைவிட்டு எழுந்து காப்பி தயார் செய்ய அடுப்பைப் பற்ற வைத்தாள். அதற்குள் கணேசன் வேறு உடுப்புப் போட்டுக் கொண்டு வெளியே போய் விட்டான். மனத்தில் ஒரு உற்சாகம் இல்லாமலே இயந்திரம் போல் இயங்கிக் கொண்டிருந்தாள் பானு.

மணி ஏழரை ஆயிற்று. வாசலில் டாக்ஸி வந்து நின்றதை அறிந்து யாராக இருக்கலாம் என்று ஜன்னல் வழியாகப் பார்த்தாள். என்ன ஆச்சரியம்! அவளுடைய தந்தையும் பின்னால் கணேசனும் வந்து கொண்டிருந்தார்கள். அப்போதுதான் முதல் நாள் ஆபீஸிலிருந்து வந்ததும் கணேசன் அவளுடைய அப்பா மறுநாள் காலை வருவதாக எழுதியிருக்கிறார் என்று சொன்னதும் ஞாபகத்துக்கு வந்தது. அதன் பிறகு அவர்களுக்குள் நடந்த தாம்பத்திய கலகத்தில் எல்லாவற்றையும் மறந்தே போய் விட்டாள். அதுதான் கணேசன் அதி காலையில் எழுந்து அவரை அழைத்து வர ஸ்டேஷனுக்குச் சென்றிருக்கிறான் என்று நினைத்தாள். இந்த மட்டும் தன்னிடம் இருக்கும் கோபத்தைத் தகப்பனாரிடம் காட்டாமல் அவரை ஸ்டேஷனுக்குச் சென்று அழைத்து வந்தாரே என்று மனத்திற்குள் மிகவும் சந்தோஷப் பட்டுக் கொண்டாள்.

பானுவின் அப்பாவே உள்ளே வந்துவிட்டார். பெண்ணைப் பார்த்து, "என்னம்மா, பானு! உடம்புக்கு என்ன? உனக்கு உடம்பு சரியில்லாததால் ஸ்டேஷனுக்கு வரவில்லை என்று சொன்னார், மாப்பிள்ளை. இல்லாவிட்டால் நீயும் அவரோடு எப்பொழுதும் ஸ்டேஷனுக்கு ஓடிவந்து விடுவாயே என்று நினைத்தேன்!" என்று வாத்சல்யத்தோடு கேட்டார். அதற்குள் கணேசன் மாமனாரை உட்காரச்சொல்லி விட்டுத் தன்னுடைய அறைக்குச் சென்றான்.

பானுவும் உடனே, "உடம்பு ஒன்றுமில்லை, அப்பா! நேற்று இரவெல்லாம் ஒரே தலைவலியாக இருந்தது. அதனால் தான் வரவில்லை. இருங்கள், இதோ ஒரு நொடியில் காப்பி கொண்டு வருகிறேன்" என்று கூறிவிட்டு உள்ளே போனாள்.

காப்பியைத் தகப்பனாரிடம் கொடுத்து விட்டுப் பிறந்தகத்து க்ஷேம லாபங்களை அக்கறையுடன் விசாரித்துக் கொண்டிருந்தாள். "ஏம்மா! மாப்பிள்ளைக்குக் காப்பி கொடுக்கவில்லையே!" என்றார். தகப்பனாரிடம் விட்டுக் கொடுக்காமல், "ஆமாம். உங்களோடு பேசிக் கொண்டே இருந்துவிட்டேன். இதோ கொண்டு வருகிறேன்" என்று உள்ளே போனாள். அதைக் கேட்டுக் கொண்டே வந்த கணேசன், "எனக்குக் காப்பி இப்பொழுது வேண்டாம், மாமா! நான் ஒரு தடவைக்கு மேல் காப்பி சாப்பிடுவதில்லை!" என்று மாமனாரைப் பார்த்தே பதில் சொன்னான்.

கணேசன் ஆபீஸ் போகும் வரை பானுவுடன் பேசவே இல்லை. ஆபீஸுக்குப் புறப்படு முன் மாமனாரும் மாப்பிள்ளையுமாகச் சாப்பிட உட்கார்ந்தார்கள். பானு பரிமாறினாள். அவளுடைய தகப்பனாரோ மாப்பிள்ளைக்கு அதைப் போடு இதைப் போடு என்று சொல்லிக் கொண்டிருந்தார். எல்லாவற்றிற்கும் பதில் ஒன்றும் பேசாமல் தலையை அமர்த்திக் கொண்டிருந்தான் கணேசன்.

ஒவ்வொரு தடவையும் பானுவின் அப்பா வரும் பொழுதெல்லாம் வீடு எவ்வளவு கலகலப்பாக இருக்கும்! சாப்பிடும் பொழுது கணேசன் இப்படியா வாய்மூடி மௌனியாக அமர்ந்திருப்பான்!



அவனுடைய சமையலையும் அதனால் தான் நிடகாத்திரமாக இருப்பது தெய்வச் செயலே என்றும் எவ்வளவு தூரம் கேலி செய்யலாமோ அத்தனையும் செய்வானே! பானுவும் மனத்தில் மகிழ்ச்சியோடு கணேசனுடன் பொய்க் கோபம் கோபித்துக் கொண்டு எதிர்த்துச் சண்டை போடுவாளே!

இன்றைக்கோ அவர்கள் இருவரும் பேசவே காணோம். ஏதாவது தகராறோ என்று சந்தேகப் பட்டார் பானுவின் தந்தை. சிறுசுகளுக்குள் எல்லாம்தான் இருக்கும். அதை நாம் கேட்டுப் பெரியதாக்கக் கூடாதென்று பேசாதிருந்தார்.

"நான் போய்விட்டு வரேன், மாமா! சாயந்திரம் ஐந்து மணிக்கெல்லாம் வந்து விடுகிறேன். வந்த பிறகு எங்காவது வெளியில் போகலாம்!" என்று மாமனாரிடம் சொல்லிக் கொண்டு ஆபீஸுக்குப் போய்விட்டான் கணேசன்.

*　　　*　　　*

பானு தன் அறையில் போய் உட்கார்ந்து கொண்டு விம்மி விம்மி அழுதாள். கணேசன் தன்னிடம் இவ்வளவு அலட்சிய பாவத்துடன் இருப்பானென்று நினைக்கவில்லை. அதை அவளால் பொறுக்கவும் முடியவில்லை. அதுவும் தன் தகப்பனார் எதிரில் தன்னை அவமானப் படுத்துவதுபோல் பேசாமல் இருந்தது அவளுடைய வருத்தத்தை இன்னும் அதிகமாக்கியது.

கொஞ்சம் கொஞ்சமாய்த் தன்மேல்தான் தவறு என்று உணர ஆரம்பித்தாள். அந்த ஜார்ஜெட் புடவையை ஏன் கேட்டோமென்று வருந்தினாள். எப்பொழுது கணவனுக்குப் பிடிக்கவில்லையோ அப்பொழுது அந்தக் காரியத்தைச் செய்வது உத்தம பத்தினிக்குக் கொஞ்சம்கூட அழகு இல்லையே! ஏதோ அந்தப் புடவையை ஆசைப் பட்டுக் கேட்டு விட்டாள். அது கணேசனுக்குப் பிடிக்கவில்லை. வேண்டாமென்று சொன்னவுடனேயே விட்டிருந்தால் இத்தனை தகராறு நேர்ந்திருக்காது அல்லவா!

அப்பா எதிரில் இந்த மௌனவிரதம் சகிக்க முடியவில்லை. சாயந்திரம் கணேசன் வந்தவுடன் அவன் காலில் விழுந்தாவது தன்னை மன்னித்து முன்போல இருக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்வதென்று தீர்மானம் செய்த பிறகுதான் அவள் மனம் கொஞ்சம் நிம்மதி யடைந்தது.

மத்தியானம் மூன்று மணிக்கெல்லாம் பானுவின் தந்தை காப்பி சாப்பிட்டுவிட்டு யாரோ சிநேகிதர்களைப் பார்த்துவிட்டு மாப்பிள்ளை வருவதற்குள் திரும்பி வந்து விடுவதாகச் சொல்லி விட்டு வெளியில் போனார்.

பானு வழக்கம்போல் தன்னைச் சிங்காரித்துக் கொண்டு கணவரின் வரவை ஆவலுடன் எதிர் நோக்கி வாசலில் நின்று கொண்டிருந்தாள்.

அன்று ஆபீஸில் கணேசனுக்கும், வேலையே ஓடவில்லை. பானு அப்படிப் பிடிவாதம் பிடித்தது தவறு என்று ஒரு சமயம் தோன்றும். உடனே ஐயோ பாவம், தன்னைத்தானே அவ்வளவு சுவாதீனமாய்க் கேட்டாள். அதற்கு அவளிடம் மிருகத்தனமாய் நடந்து கொண்டது தன் தவறு என்றும் தோன்றும். மாமனார் எதிரில் இப்படிச் சண்டை போட்டுக் கொண்டிருந்தால் அவர் தன்னைப் பற்றி எவ்வளவு மோசமாக நினைத்துக் கொள்வாரோ என்று நினைத்துக் கொண்டான். அவளாகத் தன் பிடிவாதத்தை விட்டுப் பேசினாளானால் தானும் சமாதானத்துக்கு வந்து விடலாம் என்று தீர்மானம் செய்து கொண்டு வீட்டுக்குத் தினம் வருவதைவிடச் சீக்கிரமாகவே வந்து சேர்ந்தான் கணேசன்.

கணவன் தூரத்தில் வரும்பொழுதே அவனுடன் எப்படிப் பேசுவது என்று பானுவுக்கு வெட்கமாக இருந்தது. புது மணப் பெண் மாதிரி உள்ளே போய் விட்டாள்.

*　　　*　　　*

கணேசன் விறைப்பாகத் தன் அறைக்குச் சென்று உடைகளை மாற்றிக்கொண்டு அங்கேயே உட்கார்ந்து ஏதோ ஆபீஸ் பைல்களைப் புரட்டிக் கொண்டிருந்தான். கைகள்தான் காகிதங்களைப் புரட்டிக் கொண்டிருந்தனவே ஒழியக் கண்களும் மனமும் பானு வருகிறாளாவென்று அறைக்கு வெளியிலேயே வட்டமிட்டுக் கொண்டிருந்தன.

பானு மெதுவாக அறைக்குள் தயங்கித் தயங்கி வந்தாள். "டிபன் இங்கே கொண்டு வரட்டுமா?" என்று மெதுவாகக் கேட்டாள். கணேசன் தன் பிடியைத் தளர்த்த விரும்பாமல், "எனக்கு ஒன்றும் வேண்டாம்!" என்றான்.

பானுவுக்கு அதற்குமேல் பொறுக்க முடியவில்லை. "இங்கே பாருங்கள்! இனிமேல் சத்தியமாக உங்களை ஒரு பொருளும் கேட்கவில்லை. அதற்காக இப்படி என்னுடன் பேசாமல் சித்திரவதை செய்யாதீர்கள்! தயவுசெய்து முன்போல என்னிடம் கலகலப்பாக இருந்தால் அதுவே போதும். நான் என்ன தப்பு செய்திருந்தாலும் தயவு செய்து என்னை மன்னித்து விடுங்கள்!" என்று சொல்லிக் கோவென்று கதறி விட்டாள்.

கணேசன் மனம் இளகி விட்டது. அன்பு மனைவியை இவ்வளவு தூரம் நோகச் செய்து விட்டோமே என்று தோன்றியது. மளமளவென்று எழுந்தான்.

அடுத்த நிமிஷம் அவனுடைய அரவணைப்பில் அவள் கொடிபோல் துவண்டு கிடந்தாள்.

"சீ! அசடு! எதற்கு இப்படி அழுகிறாய்! நேற்று பாவம் உன்னிடம் கொடுமையாக நடந்து கொண்டு விட்டேன்" என்று கூறி அவள் கண்களில் வழிந்த கண்ணீரைத் துடைத்தான்.

"நேற்றைக்கு என்மேலும் தப்புதான். நீங்கள் வேண்டாமென்று சொன்னவுடனேயே நானும் சரியென்று சொல்லவேண்டும் என்று தோன்றியது. நான் வேண்டும் என்று வீம்புக்காகப் பிடிவாதம் பிடித்தது பிசகுதானே! அதற்குத் தகுந்த தண்டனையை அனுபவித்து விட்டேன்" என்றாள். பிறகு "என்மேல் கோபித்துக் கொண்டுதானே வெளியில் எங்கேயோ சாப்பிட்டீர்கள்!" என்றாள்.

"நேற்றைக்கு என் சிநேகிதன் குழந்தையின் ஆண்டு நிறைவை ஒட்டி இரவு சாப்பிடச் சொல்லி இருந்தான். நேற்று என்னை ஏதாவது நீ பேச விட்டால்தானே!" என்றான் கணேசன்.

இச் சமயத்தில் பக்கத்து வீட்டுக் குழந்தை பிரேமா மெதுவாக அடிமேல் அடிவைத்து வந்து கொண்டிருந்தாள். "பிரேமா! ஏன் இப்படி பயந்து நடுங்கிக் கொண்டு வருகிறாய்! காலையிலிருந்து ஏன் வரவேயில்லை!" என்று செல்லமாகக் கடிந்த வண்ணம் அவளைத் தூக்கி வைத்துக் கொண்டாள் பானு.

"நீயும் மாமாவும்தான் 'ஓ' விட்டுண்டுட்டேளே என்றுதான் வரவில்லை!" என்றாள் பிரேமா.

அதைக் கேட்ட தம்பதிகள் இருவரும் கொல்லென்று சிரித்து விட்டார்கள்.

அப்போதுதான் வெளியிலிருந்து வந்து கொண்டிருந்த பானுவின் தந்தை உள்ளே ஒரே கோலாகலமாய்ச் சிரிப்பும் விளையாட்டும் அமர்க்களப்படுவதைக் கவனித்தார். 'தாம்பத்திய கலகம் எல்லாம் ஓய்ந்து சமரசம் ஆரம்பித்து விட்டது' என்பதை அறிந்து அவர் களிப்புடன் உள்ளே நுழைந்தார்.

# தமிழ்க் களஞ்சியம்

டி.கே.சி.

## 32. தொழில் இல்லையா?

இப்போது உலகத்தில் அரசெல்லாம் அனேகமாய்க் குடியரசு தான். ராஜா என்றும், மகுடம் என்றும் செங்கோல் என்றும் சொல்லுகிற காரியம் அனேகமாய்ப் போய்விட்டது. ஏதோ அற்ப சொற்பம் அங்கொரு ராஜா இங்கொரு ராஜா என்றிருக்கிறார்கள். அவர்களும் பொம்மை ராஜாக்கள் தான். அதுவும் குடிகளாய்ச் சேர்ந்து வைக்கிற ராஜாக்கள் தான்.

இது விஷயமாகச் சிம்மாசனத்தைக் காலி பண்ண அவசியம் ஏற்பட்ட ஒரு ராஜா சொன்னார். "இனிமேல் உலகத்தில் நாலு ராஜாக்கள் தான் இருப்பார்கள். இஸ்பேட் ராஜா, கிளாவர் ராஜா, ஆடுதன் ராஜா, டயமன் ராஜா ஆக மிச்சம் நாலு ராஜாக்கள் தான் உலகத்தில். மற்றப்படி அரசெல்லாம் குடியரசுதான்."

குடியரசு என்றால் மக்களாகச் சேர்ந்து ஒரு அபிப்பிராயம் கொண்டு அரசியலை வகுக்கிற காரியம். நிர்வாகம் அதை ஒட்டிய நிர்வாகம்.

ஆகவே மக்களை ஒரு அபிப்பிராயத்துக்குக் கொண்டு வர வேண்டும். தற்போது அரசியல் பிரமுகர்கள் எல்லாரும் (ஏன் இரண்டாயிர வருஷமாகவே) சொல் வன்மையினாலேயே மக்களுடைய அபிப்பிராயத்தை ஒன்று படுத்தி வந்திருக்கிறார்கள்.

குறளாசிரியர் காலத்திலும் சொல் வன்மையின் ஆதிக்கம் அப்படி இருந்திருக்கிறது.

வேறு எந்த சக்தியோடும் ஒப்பிட்டுச் சொல்ல முடியாத சக்தி, சொல் வன்மை என்பது குறளாசிரியரது அனுபவம். அவர் சொன்னார்:

நாநலம் என்னும்
நலனுடைமை; இந்நிலத்து
யாநலத்(து) உள்ளதூஉம்
அன்று

[நாநலம் என்னும் நலனுடைமை: சொல் வன்மை என்னும் சக்தியைக் கொண்டிருத்தல்; இந்நிலத்து: இந்தப் பரந்த உலகத்தில் காணுகிற; யாநலத்து உள்ளதூஉம் அன்று: எந்த சக்தியோடும் சேர்த்துச் சொல்லக்கூடிய சக்தி அன்று.]

தமிழ் நாட்டில் பழைய காலத்தில் பேசுகிறது உண்டா? பேச்சில் வன்மை உண்டா? என்று பலர் கேட்கிறார்கள். ஏதோ பேச்செல்லாம் கப்பலேறி இங்கிலீஷோடு இங்கிலீஷாக வந்ததாகத்தான் எண்ணம். குறளாசிரியர் இரண்டாயிரம் வருஷத்துக்கு முன் இருந்தவர். இது விஷயமாக இன்னும் என்ன சொல்லுகிறார் என்று கேட்போம்.

* * *

மக்களை ஒன்று சேர்த்து வைக்கிறது ரொம்பக் கஷ்டம், ரத உத்ஸவத்தில் பலரையும் ஒன்று கூடச் செய்து தேரை இழுக்கச் செய்கிற காரியம் எவ்வளவு கஷ்டம் என்பது கோயில் நிர்வாகிகளுக்குத் தான் தெரியும். அவர்களோடு ஒத்துழைக்கிற சப் மாஜிஸ்டிரேட்டுகளுக்கும் போலீஸ் அதிகாரிகளுக்கும் தெரியும்.

உத்ஸாகமாகச் செய்கிற வேலையிலேயே இவ்வளவு சிரமம் ஏற்பட்டு விடுகிறது, மக்களை ஒன்று சேர்ப்பதில்.

ஆனாலும் ஒரு காரியத்தைக் கண் கூடாகப் பார்த்த மாதிரி பார்க்கிறோம். யுத்தம் வந்து விட்டால் சில தேசத்தார் ஒரு சிறு காரியத்துக்காக எதிரியை மடக்குவதற்காக ஆயிரக் கணக்கான பேர் நான் முந்தி நீ முந்தி என்று உயிரைக் கொடுக்க வருகிறார்கள். இது கதையல்ல. உணர்ச்சி மேலீட்டில் ஏற்படுகிற தியாகம்.

உயிரைக் கொடுப்பதற்கு ஏதாவது இல்லையா என்று பரபரப்போடு விசாரிக்கிற காரியமாய் இருக்கிறது விஷயம்.

**விரைந்து தொழில்கேட்கும் ஞாலம்**

உலகத்தார் ஓடியே வந்து உயிரைக் கொடுப்பதற்கான வேலையே இல்லையா என்று கேட்பார்கள். எப்போது:

தேசத்திற்கு ஏற்பட்ட விபத்தை (அல்லது லாபத்தை)ப் பேசக் கூடியவர்கள் இருந்தால்.

விரைந்து தொழில்கேட்கும்
ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப்
பெறின்.

[விரைந்து தொழில் கேட்கும் ஞாலம்: ஓடியே வந்து தியாகத்துக்கு ஏதேனும் வேலை யிருக்கிறதா என்று கேட்பார்கள் உலகத்தவர்; நிரந்து: ஒழுங்குபட; இனிது: உணர்ச்சியோடு; சொல்லுதல் வல்லார்ப் பெறின்: சொல்லக் கூடியவர்கள் இருந்தால்.]

# the Popular Pen!






வில்ஸன் வாக்வ மாடிக் பேனாவால் எழுத ஆனந்தமாயிருக்கிறது. மை ஒரே சீராக பாய்கிறது—உலர்ந்து தேங்கி நிற்பதில்லை; அளவுக்கதிகமாகவும் பாய்வதில்லை. அதிக விலையுயர்ந்த ரக பேனாவின் சகல நல்ல அம்சங்களும் வாய்ந்த குறைந்த விலை பேனா இது. சொகுசான தோற்றம்; நல்ல அணியாகவும் அமையும்; நன்கு உழைக்கும் விலை ரூ. 5-12தான்.

# WILSON
## VACUMATIC PEN
WITH A GUARANTEE

Sole Distributors for India
**KIRON & CO., LTD.**
BOMBAY - CALCUTTA - MADRAS

PRICE
Rs. 5/12
ONLY

14 காரட் கெட்டி தங்க நிப் பொருத்தப்பட்டுள்ளது. விலை ரூ. 8-12.

மதராஸ் பிராஞ்சு:

கிரான் & கோ., லிமிடெட், 82, நாராயண முதலித் தெரு, ஜி. டி. சென்னை

---

3 வாசனைக் கலாரத்னங்கள்

# கம் கம் ஜவாஜ் * கம்பால் * கமகர் அகர்பத்திகள்.

டி. எல். சுகந்தாலயா,
வாசனைதிரவிய வியாபாரிகள், பெங்களூர்-2

# மிலட்டூர் பாகவதமேள நாட்டிய-நாடகம்

ஈ. கிருஷ்ணய்யர்

பெரும்பான்மையான பொது ஜனங்களுக்கு, தெய்வ பக்தியையும், நல்லொழுக்கத்தையும் புகட்டி, அவர்களைப் பண்படுத்தி அழகுணர்ச்சியுடன் நாகரிகமடையச் செய்வதற்காக, நம் முன்னோர்கள், லலிதக் கலைகளைப் பல வகையாகச் சிருஷ்டித்து வளர்த்து உபயோகித்து வந்திருப்பது, நம் பாரத நாட்டின் விசேஷமாகும். அத்தகைய கலைப் பொக்கிஷங்களில் இப்போது எஞ்சி யிருப்பதைவிட மறக்கப்பட்டிருப்பவையே அதிகம் எனலாம். எஞ்சி யிருப்பவைகளின் அருமை பெருமைகூட நம்மவர்களுக்கு இன்னும் நன்கு தெரிந்தாகவில்லை.

சுதந்திர இந்திய மக்களின் முன்னேற்றத்துக்கு, அரசியல், பொருளாதாரம் முதலியவைகளைப் போலவே, கலைவளர்ச்சியும் முக்கியமாகும். நமது அரசாங்கத்தாரும் இதை அறிந்து அதற்கான முயற்சிகளை ஒருவாறு எடுத்து வருகிறார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில், கலையபிமானிகள், மூலை முடுக்குகளில் கவனிக்கப்படாது பதுங்கிக் கிடக்கும் அரும் தேசியக் கலை வகைகளைத் தேடி ஆராய்ச்சி செய்து அவைகளைப் பற்றிய அறிவைப் பரப்ப வேண்டியது அவசியமாகும்.

சில தேசபக்தர்களின் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலான இடைவிடா உழைப்பினால், இப்போது பரத நாட்டியம் எனப்படும் சதிர்-நாட்டியம், மறு மலர்ச்சியுற்று, நாடெங்கும் பிரபல மடைந்து விட்டதோடு, சர்வதேச மதிப்பையும் பெற்று விட்டது. ஆனால், பரத நாட்டியம் என்பது ஒரே விதந்தான், அது தனிப்பட்ட பெண்கள் ஆடுவதற்கே உரித்தது, அதில் ஆண்களுக்கு இடமேயில்லை, சிருங்காரச் சுவை தான் அதற்கு முக்கியம், அதில் பலர் சேர்ந்து நடிக்கும் நாடகச் சுவையில்லை — என்றெல்லாம் தவறான அபிப்பிராயங்கள் பரவி யிருக்கின்றன. அத்தகைய அபிப்பிராயங்கள் சரியில்லை என்று நிரூபிப்பதற்கு, மிலட்டூர் பாகவத மேளநாட்டிய-நாடகக் கலையை ஒரு தரம் பார்த்தாலே போதும்.

அதை உற்றுக் கவனித்தால், பரத நாட்டியம் எனப் பெயர் பெற்ற சதிர்-நாட்டியம் அதன் ஒரு கிளைதான்; அதே இலக்கணத்தைத் தழுவிய நாட்டிய-நாடக வகை வேறொன்று இருக்கிறது; அதில் ஆண், பெண் பாத்திரங்களாகப் பலர் சேர்ந்து நடிக்கும் நாடகச் சுவை மிகுந்திருக்கிறது; சிருங்காரம் தவிர மற்றச் சுவைகளும் அதில் சாங்கோபாங்கமாய் விளக்கப் படுகின்றன என்பதெல்லாம் தெரியவரும்.

சுருக்கச் சொன்னால் பரத நாட்டியத்தில் மூன்று முக்கிய வகைகள் உண்டு:—(1) சிறு கவிதை போன்ற சதிர்-நாட்டியம் (2) பெரும் காவியக் கதைகளைக் கையாளும் நாட்டிய-நாடகம் (3) குறுகிய கதையை எளிய சிறு நாட்டிய-நாடகமாக விளக்கும் குறவஞ்சி. இம் மூன்றும் பரத நாட்டிய இலக்கணத்தைத் தழுவியவையே.

இரண்டாவது வகையான பாகவத மேள நாட்டிய-நாடக சம்பிரதாயம், தஞ்சை ஜில்லாவில், மிலட்டூர், சூலமங்கலம், ஊத்துக்காடு, சாலிய மங்கலம், நல்லூர், தேப்பெருமாநல்லூர் ஆகிய ஆறு கிராமங்களில் முன்காலத்தில் பிரபலமாய் வழக்கத்திலிருந்து வந்தது. ஆந்திர தேசத்துக் கூச்சுப்பூடி என்ற கிராமத்திலும் இருந்து வந்தது. சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்னர், தியாகராஜருக்கு மூத்தவராய் மிலட்டூரில் திகழ்ந்த வெங்கட்டராம சாஸ்திரியாரால் இயற்றப்பட்ட நாட்டிய-நாடகங்களே, தஞ்சை கிராமங்களில் நடிக்கப் பட்டு வந்திருக்கின்றன. இப்போது இக்கலை மற்ற கிராமங்களில் கைவிடப்பட்டு மிலட்டூரில் மாத்திரம் எஞ்சி இருக்கிறது.

1950 வருஷம் சூலமங்கலத்திலும், 1951, '52, '53 வருஷங்களில் மிலட்டூரிலும், அவ்வூராரின் அன்பார்ந்த அழைப்புக் கிணங்கி, ஆங்கு நாட்டிய-நாடக விழாவைத் தொடங்கி வைத்து, அக்கலை முறையைக் கவனித்து அறிந்து கொள்ள எனக்குச் சந்தர்ப்பம் வாய்த்தது.

மிலட்டூர், அய்யம்பேட்டை, திட்டை என்ற ரயில்வே ஸ்டேஷன்களிலிருந்து, சுமார் 5 மைல் தூரத்திலுள்ளதோர் நடுத்தர கிராமம். அதன் பக்கத்திலே காவிரி நதியின் ஒரு கிளையாறு ஓடுகிறது. கிராமம் செழிப்பான நெல் வயல்களாலும் தோப்புத் துறைகளாலும் சூழப்பட்டு அழகாயிருக்கிறது. ஏழெட்டு நீண்ட தெருக்களையுடையது. வடக்குத் தெருவில் வரதராஜப் பெருமாள் கோவில் இருக்கிறது. அதன் வஸந்தோற்சவத்தின் ஓர் அங்கமாகத் தான், மே, ஜூன் மாதங்களில், நாட்டிய-நாடக விழாவும் நடைபெறுகிறது. கோவிலின் முன்பு தெருவில் சுமார் 100 அடி நீளமான தட்டு'ப் பந்தலும், அதன்



பிரஹலாதா நாட்டிய நாடகத்தில் வரும் இரண்யனின் மனைவி ராணி லீலாவதி. ராணிக்கு வலது பக்கத்தில் பாடிக் கொண்டிருப்பவர்தான் வித்துவான் ஸ்ரீ பி. கே. சுப்பய்யர்.



தஞ்சாவூர் ஜில்லா மிலட்டூரில் நடந்த பாகவத மேள நாட்டிய நாடகத்துக்கு விஜயம் செய்திருந்த பிரமுகர்களும், நாடகத்தில் பங்கெடுத்துக் கொண்டவர்களும்.

நிற்பவர்கள் (இடமிருந்து):—ஸ்ரீ ஜி. சுவாமிநாதன்; ஸ்ரீ நடராஜன் (அமெரிக்கா); ஸ்ரீ ஆர். நாகராஜன், ஸ்ரீ ரங்கவிட்டல் (பம்பாய்). உட்கார்ந்திருப்பவர் (இடமிருந்து):—ஸ்ரீமதி சீதா சட்டர்ஜி (வங்காளம்); ஸ்ரீ பாலு பாகவதர்; இந்திராணியின் குமாரி; ஸ்ரீ ச. கிருஷ்ணய்யர்; ஸ்ரீ கே. சுப்பிரமண்ய அய்யர்; ஸ்ரீமதி இந்திராணி. கீழே உட்கார்ந்திருப்பவர்:—பிரஹலாதனாக நடித்த ஸ்ரீ கே. சந்தானம்.

கிழக் கோடியில் ஒரு சிறு அரங்க மேடையும் அமைத்து, அலங்காரமுற்ற வரதராஜப் பெருமாளைக் கோவிலின் முன்பாகத்தில் எழுந்தருளச் செய்து அவரது சன்னிதியில் நாட்டிய-நாடகங்களை நடத்துவது வழக்கம். திரள் திரளாகப் பார்க்க வரும் ஜனங்கள் எல்லோரும், அரங்கத்தின் முன்பு, தரையில் வீற்றிருப்பார்கள். நாடகங்கள் இரவு 9-30 மணிக்குத் தொடங்கி, விடியற்காலை 3-30 மணிவரை நடக்கும்.

ஆண்டு தோறும் வழக்கமான பிரஹ்லாதா, மார்க்கண்டேயா, உஷா, ருக்மாங்கதா என்ற சரித்திரங்களுடன், இவ்வருஷம் ஹரிச்சந்திராவும் புதிதாக நடிக்கப்பட்டது.

வித்வான் பாலசுப்பிரமணியம் என்ற பாலு பாகவதர், பாகவத மேள கோஷ்டியாருக்கு ஆசிரியராயும், நாடகத்தை நடத்துபவராயும் இருந்து நாடகங்களை நடத்தி வருகிறார். அவர், தியாகராஜ சிஷ்ய பரம்பரையில் வந்த சுந்தர பாகவதர், கிருஷ்ண பாகவதர் இவர்களின் சிஷ்யர். மிலட்டூர் நடேசய்யரிடத்து நாட்டிய-நாடகக் கலையை முறையாகப் பயின்று பழுத்த அநுபவம் கொண்டவர். நடிகர்களும், பாடகர்களும் அவருக்கு அடங்கியே ஒத்துழைக்கிறார்கள். எனவே, மிலட்டூர் நாட்டிய-நாடகங்கள் கூடியவரை ஒழுங்காயிருக்கின்றன. நடைமுறையிலுள்ள நாடகங்களை எழுதி வைத்த வெங்கடராம சாஸ்திரியார், அவருக்குப் பின் வெங்கடராம பாகவதர், அவருக்குப் பின் நடேசய்யர் போன்ற பெரியார்கள் மிலட்டூரிலேயே வாழ்ந்து கலையைப் பல தலைமுறைகளாக வளர்த்து வந்ததால், ஆங்குள்ள பாடாந்தரங்களும், சங்கீதமும் சிறப்பா யிருக்கின்றன.

பொதுவாக முன் தலைமுறையில் புகழ்பெற்ற மிலட்டூர் நடேசய்யர், குலமங்கலம் சீதாராம பாகவதர், ஊத்துக்காடு சுவாமி பாகவதர் போன்ற பெரியார்களின் நடன நடிப்புச் சிறப்புப் போல் இப்போது இல்லையாயினும், மிலட்டூரில் சங்கீதமும் கட்டுவாங்கமும் பழுது படாது, கீர்த்தியாக இருக்கின்றன. பாலு பாகவதர், சுப்பிரமணிய அய்யர், பி. கே. சுப்பய்யர் இவர்கள் வழங்கும் பின்னணி சங்கீதம், உயரிய கர்னாடக சம்பிரதாயத்தோடு, ராக பாவப்பொழிவும், நாஸூக்கும்கொண்டு, உணர்ச்சி ததும்பி கேட்போர் மனத்தை வாரி அள்ளுகிறது. நடனங்களுக்கான சொல்லுக் கட்டுகளும், தீர்மானங்களும்,கோவைச் சிறப்புடன் ஷட்ஜ பஞ்சமங்களில் சுருதி சேர்ந்து, ரஞ்சகமான சங்கீதமாக ஒலிக்கின்றன. இவ்விஷயம் சதிர் நாட்டியத்தைக் கையாளுபவர்கள் கவனிக்கத் தக்கது.

இந்த நாடகங்களில் பத்யம், கத்யம், சப்தம், தரு, த்விபதா முதலிய பல சங்கீத வகைகள் கையாளப் படுகின்றன. சில தருக்கள், தியாகராஜ கிருதிகளைப் போல் ஒலிக்கும். ஆனால் அவைகள் தியாகராஜருக்கு முன்னரே வெங்கடராம சாஸ்திரியாரால் இயற்றப் பட்டவை. சில பாடல்கள் க்ஷேத்ரய்ய பதங்களைப் போன்று வெகு நாஸூக்காய் இழைகின்றன. ஆங்காங்கே நடைபெறும் சம்பாஷணைகளும், தனிப் பேச்சுக்களுமான வாசிகமும் உண்டு. பாடல், பேச்சு ஒவ்வொன்றும் அபிநயத்துடன் விளக்கப்படுகிறது. பல பாடல்களுக்கு அடவு ஜாதி ஆடல்களுமுண்டு. அபிநயம் சாஸ்திர சுத்தம் கொண்டு, ஏராளமான கற்பனையுடன் விரிவா யிருக்கிறது.

சதிர்-நாட்டியத்தில் தென்படும் அடவு ஜாதி ஆடலழகில் ஊன்றி யிருப்பவர்களின் கண்களுக்கு, இந்த நாட்டிய-நாடக முறையில் காட்சியளிக்கும் ஆடல்கள் போதிய சௌஷ்டவம் இல்லாததாகத் தோன்றலாம். அதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. இக்கால நடிகர்களுக்குப் போதிய பயிற்சியும் அநுபவமும் இல்லை யென்பது ஒன்று. ஆடல் முறையில் கால்ஜதிகளுக்கு ஏற்ற நிர்த்தஹஸ்த விநியோகங்களில் சில கட்டுப்பாடுகள் இருப்பது இரண்டாவது. உத்தம நாடக பாத்திரங்கள், கைகளைப் பெரும்பாலும் மார்புக்கு நேராகவும், அதிகம் உயரம் நீட்டாமலும், தொப்புளுக்குக் கீழ் போகாமலும் விநியோகம் செய்ய வேண்டுமென்று விதி யிருப்பதாகத் தெரிய வருகிறது.

தளுக்கு, மினுக்கு, குலுக்குகள் அதிகமிருக்கக் கூடாதென்றும் பக்தி பாவம் நிறைந்ததா யிருக்க வேண்டும் என்றும் சொல்லப்படுகிறது. ஏதாகிலும் ரஞ்சகமான சங்கீதத்துடன், தனியாடல், அபிநயம், ஆடலுடன் அபிநயம் சேர்ந்த நிருத்யம், நடிப்பு இவை யெல்லாம் ஒருங்கே சேர்ந்து விளங்கும் நாட்டிய-நாடகக் கலை முறை பார்ப்போரை வியக்கும்படி செய்கிறது. நாடகத்தில் புதியதோர் அநுபவமாகவே தோன்றுகிறது. சுருங்கச் சொன்னால், 2000 ஆண்டுகளுக்கு முன் பரத முனிவரால் நிறுவப்பட்ட நாட்டிய சாஸ்திரம், இந்த மிலட்டூர் நாட்டிய—நாடக முறையில் பிரதிபலித்து ஜீவித்திருக்கிறது.

பல நாடகங்களில் கதாநாயகனாகப் பாத்திரம் தாங்கிய ஜி. சுவாமிநாதனின் நடிப்பு இயற்கைப் பொலிவு மிகுந்திருந்தது. நாயகியாய் வேஷம் தரித்த ஆர். நாகராஜனின் ஆடலபிநயங்களும் முன்னேறி யிருந்தன. இரண்டு பாகமாய் இரண்டு இரவுகளில் நடத்தப்பட்ட ஹரிச்சந்திராவில், எல்லாப் பாத்திரங்களுமே வேஷப் பொருத்தத்துடன் நன்றாய் நடித்தார்கள். குறிப்பாய் தம்பு என்ற என். வெங்கடராமன், சந்திரமதியாக நடித்து வழங்கிய ஆடலபிநயங்களும் முகபாவமும் தலை சிறந்து விளங்கின. பல பாகங்களில் சபையோர் மனங்களை உருக வைத்து விட்டார். அனிருத்தனாய்த் தோன்றிய ஜி. கிருஷ்ணமூர்த்தி, வசிஷ்டர், நாரதர் வேஷங்களைப் பூண்ட சீர்காழி வித்வான் நாகராஜய்யர், நகைச்சுவை மிகுந்த எம். ஜி. கிருஷ்ணமூர்த்தி, ஆர். சுந்தரம் முதலியவர்கள் வெகு நேர்த்தியாய் நடித்தார்கள். ராமசுவாமி பாகவதரும், எம். ஆர். சுப்ரமணியனும் பின்னணி சங்கீதத்துக்குப் பக்கபலமா யிருந்தார்கள். பாலூர் ராமகிருஷ்ணய்யர் நன்கு மிருதங்கம் வாசித்து ஒத்துழைத்தார். நாடகக் கோஷ்டியார் வருமானத்துக்கோ, விளம்பரத்துக்கோ ஆசைப் படாமல் தெய்வ கைங்கரியமாகவே நினைத்து, விழாவை நடத்தியது போற்றத் தக்கது.

சென்ற தலைமுறையில் நடேசய்யருடன் ஒத்துழைத்தவரும், முப்பது ஆண்டுகளுக்கு முன்னரைவிட்டுப் போய் லோகசஞ்சாரம் செய்து வருபவரும், தானப்ரஸ்தார நிபுணரும், இப்போது 85 வயதுக்கு மேற்பட்ட வருமான கிழவர் ராஜப்பய்யர் எதிர்பாராதபடி இவ்வருஷ விழாவுக்கு மெலட்டூருக்குத் திரும்பி வந்தது, நாடக கோஷ்டியாருக்குப் பெரும் உற்சாக மளித்தது.

ஸ்ரீமதிகள் சீதாசாட்டர்ஜி, இந்திராணி, ஸ்ரீரங்க விட்டல், குமாரி நிர்மலா முதலிய நாட்டிய வல்லோர்களும், வித்வான் எம்பார் விஜயராகவாச்சாரியாரும் விஜயம் செய்திருந்தனர்.

மெலட்டூர் நாட்டிய—நாடக நடப்பு முறையைக் கலையபிமானிகள் ஒவ்வொருவரும் பார்க்க வேண்டியது அவசியமாகும்.

மெலட்டூர் பாலு பாகவதர், குலமங்கலம் ராதாகிருஷ்ணன் போன்றவர்களை, சென்னை, தஞ்சாவூர், கும்பகோணம் முதலிய நகரங்களுக்கு அழைத்து வந்து, பரத நாட்டியத்தில் ஏற்கெனவே பயிற்சி பெற்றுள்ளவர்களுக்கு நாட்டிய - நாடக முறையைப் போதித்து, அக் கலையை விளங்கச் செய்தால் இந்த அரும்பெரும் தேசியக் கலையை அழியவிடாமல் பாதுகாக்கலாம்.

# படித்துப் பாருங்கள்!

## உமா

கண்ணைக் கவரும் மூவர்ண அட்டைச் சித்திரத்துடன் திகழும் இந்தப் புதிய மாதப் பத்திரிகை இதுவரை மூன்று இதழ்கள் வெளியாகியிருக்கிறது. பத்திரிகையைத் திறந்து பார்த்ததும் நமது கவனத்தைக் கவர்வது அச்சு வேலையின் சிறப்பாகும். அச்சுத் தொழிலில் நிபுணரான உமா பிரிண்டர்ஸ் சொந்தக்காரர் ஸ்ரீ உமாபதி 'உமா'வின் பதியாகவும் இருக்கும்போது, அழகிய தமிழ் எழுத்துக்கள் முத்துக் கோத்ததுபோல் கண்களுக்கு விருந்தா யிருப்பதற்குக் கேட்பானேன்! முதற் பகுதியில் வெளியாகும் அரசியல் குறிப்புக்கள், இப்பத்திரிகை ஸ்ரீ கிராமணியாரின் தமிழரசுக் கட்சியைத் தாங்கி நிற்கும் வலிமை வாய்ந்த ஒரு ஆணாக இருக்கும் என்பதைக் காட்டுகின்றன. மற்றப் பக்கங்களில் கருத்தைக் கவரும் கட்டுரைகளும் கதைகளும் நிறைந்திருக்கின்றன. ஆங்காங்கே ஹாஸ்யத் துணுக்குகளும் பெரியோர்களின் மணி மொழிகளும் அழகிய கட்டங்களுக்குள்ளே பொலிகின்றன. 'உலக இலக்கியம்' என்ற பகுதியில் சிறந்த மேனாட்டு இலக்கிய கர்த்தாக்களின் உயர்ந்த சிறு கதைகள் மொழி பெயர்த்து வெளியிடப்படுகின்றன. தமிழர்கள் ஆர்வத்துடன் ஆதரித்துப் பயன்பெற வேண்டிய இப் பத்திரிகையை வாழ்த்தி வரவேற்கிறோம்.

விலாசம்: 4/32, தாதா முத்தியப்பன் தெரு, தபால் பெட்டி 1377, சென்னை-1. விலை: அணா 4.

## விந்தியா

“முதலாவது உலக மகா யுத்தத்தின் போது பெல்ஜியம் தேசத்துக்குத் தலைநகர் பெல்ஜியத்தில் இல்லை. வேறு எங்கேயோ போர்ச்சுகல் தேசத்தில் இருந்தது. யுத்தம் கொஞ்சம் நீண்டு மும்முரமாக நடந்திருந்தால், பெல்ஜியத்தின் தலைநகரம் பம்பாயில் இருக்கிறது என்று எழுதி வைத்திருப்பார்கள். அதேபோலத் தமிழ்ப் பண்பாட்டுக்கு நாற்றங்காலும் வயலும் எங்கே யிருக்கிறது என்று கேட்டால் தமிழ் நாட்டில் இல்லை; எட்டிப் போய்ப் பம்பாயிலிருக்கிறது என்று சொல்லத் தோன்றுகிறது” என்று ரஸிகமணி டி. கே. சி. “விந்தியா” பத்திரிகையின் முதல் இதழில் குறிப்பிட்டிருக்கிறார். பம்பாயிலுள்ள தமிழன்பர்கள் அவ்வளவு ஊக்கத்துடன் தமிழை வளர்க்கப் பாடுபட்டு வருகிறார்கள். சங்கம் நடத்துகிறார்கள்; விழாக்கள் கொண்டாடுகிறார்கள்; தமிழ் நாட்டிலிருந்து சிறந்த நடிகர்களைத் தருவித்து நாடகங்கள் நடத்துகிறார்கள். இவற்றுக்கெல்லாம் சிகரம் வைத்ததுபோல் இப்போது “விந்தியா” என்னும் தமிழ் மாத சஞ்சிகையைத் தொடங்கி யிருக்கிறார்கள். இதுவரை மூன்று இதழ்கள் வெளி வந்திருக்கின்றன. ஒவ்வொன்றிலும் பல சுவைகள் பொருந்திய கட்டுரைகளும் கதைகளும் அரசியல் குறிப்புகளும் வெளியாகி யிருக்கின்றன. பம்பாயிலும், அதன் அக்கம் பக்கங்களிலுள்ள புனா போன்ற நகரங்களிலும் தமிழர்கள் லக்ஷக் கணக்கில் வாழ்கின்றார்கள். அவர்களுடைய தமிழன்பையும் இலக்கியப்பற்றையும் சமூக வாழ்க்கையின் பண்புகளையும் பிரபலப் படுத்துவதற்கு 'விந்தியா' ஓர் அரிய சாதனமா யிருக்கும் என்று நம்புகிறோம்.

விலாசம்: 209, ஹிமாலயா ஹவுஸ், பால்ட்டன் ரோடு, பம்பாய்-1; விலை: அணா 4.

## ஸ்ரீமத் பகவத் கீதை

தமிழில் திருக்குறளைப் போல் வடமொழியில் பகவத்கீதை உலகப் பிரசித்தி பெற்றது. அத்தகைய புனித நூலுக்கு எத்தனையோ மொழி பெயர்ப்புகள் வந்திருக்கின்றன. எத்தனையோ ஆசிரியர்கள் எழுதியிருக்கின்றனர். இந்த வெளியீடு “அண்ணா” அவர்கள் எழுதிய தெளிவான தமிழ் உரையுடன், தமிழ் எழுத்தில் ஸ்லோகங்களுடன் வந்திருக்கிறது.

பிரசுரம்: ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை - 4. விலை: ரூ. 1—4—0.

# தலையா போய்விடும்?

எஸ். வி. நாதன்

அன்றையத் தபாலில் வந்த கடிதத்தைப் படித்து முடித்த சேதுராமன் கவலையுடன் கூடிய யோசனையில் ஆழ்ந்தான். கையில் கடிதத்தைப் பிடித்தவாறு ஒரு மாதிரியாக நின்றுகொண்டிருந்த கணவனை அப்போதுதான் உள்ளேயிருந்து வந்த விஜயம் பார்த்ததும் துணுக்குற்றாள். "ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்! கடிதம் எங்கே யிருந்து வந்திருக்கு! கவலைப்படும்படியான சமாசாரம் ஏதாவது கடிதத்தில் இருக்கிறதா!" என்று கேள்விகளை அடுக்கினாள்.

"கவலைப்படும்படியான சமாசாரம் ஒன்றுமில்லை. அப்பாவும் அம்மாவும் இன்னும் ஒரு வாரத்தில் இங்கே வருகிறார்களாம். ஒரு மாதத்துக்கு மேல் தங்குவார்கள் போலிருக்கிறது" என்றான் சேதுராமன்.

"கவலைப்படும்படியான சமாசாரம் எதுவுமில்லை என்றீர்களே! இதைவிடக் கவலைப்பட வேண்டிய சமாசாரம், துயரச் சேதி, வேறு இருக்கிறதா என்ன!" என்றாள்.

பேசாமல் நின்ற சேதுராமனைப் பார்த்து மேலும் கூறினாள்:—"இப்போ எதுக்காக திடீர் என்று இங்கே கிளம்பி வருகிறார்களாம்! கிராமத்தில் இருக்கப் பிடிக்காமல் அந்த வாழ்க்கை அலுத்து விட்டதாமோ! குஷியாக நகர வாசம் பண்ணணும் என்று ஆசையாயிருக்கிறதோ!" அவள் கண்களில்தான் எத்தனை அருவருப்பு, எவ்வளவு வெறி!

"நகர வாசம் பண்ணணும் என்கிற ஆசையில்லை. இங்கே அடுத்த வாரம் பிரம்மோத்ஸவம் ஆரம்பமாகிறதோ இல்லையோ! அதைப் பார்த்ததுமாதிரியும் இருக்கும், நம் எல்லோருடனும் ஒரு மாதம் இருந்தாற்போலுமிருக்கும் என்பதுதான்" என்றான் சேதுராமன்.

"நான் முழுக்க உடம்பை ஒடித்து வேலை செய்து நீங்கள் சம்பாதித்து, இரவு பகலாய் மாடுமாதிரி நானும் வீட்டில் உழைத்ததால் அவர்கள் வந்து குஷியாய் உத்ஸவம் பார்ப்பார்கள். இன்னும் எதுவேண்டுமானாலும் பார்ப்பார்கள்! இங்கே ஒன்றும் கொட்டிக் கிடக்கவில்லை. 'இன்றையப் பொழுது போகணுமே! ஈச்வரா!' என்கிற கதையாயிருக்கு நம் குடும்ப நிலவரம். இதில் விருந்தாளிகள் வேறே!"

"என்ன, அப்படிச் சொல்கிறாய் விஜயம்! அவர்கள் விருந்தாளிகளா!"

"யாராயிருந்தால் என்ன! இங்கே படுகிறபாடு கடவுளுக்குத் தெரியும்! இன்றைக்குத் தேதி பதினைந்துதானாகிறது; கையில் தம்பிடி கிடையாது. ஊரெல்லாம் கடன் வாங்கியாச்சு. இனிமேல் கடன் கேட்கிறதுக்கு இடமில்லை. வாங்கி இருக்கும் கடன்களையெல்லாம் எப்போ அடைக்கப் போகிறோம், நிம்மதியாய்மூச்சு விடப் போகிறோம் என்று நான் கவலைப் பட்டுக் கொண்டிருக்கிறேன். நீங்கள் என்னடா என்றால் அப்பா, அம்மா ஆச்சே என்கிறேள்! அப்பா அம்மா இருந்தால் மாத்திரம் செலவாகாதோ! காற்றைச் சாப்பிட்டு விட்டுப் பேசாமலிருந்து விடுவாளோ...!"

"நீ சொல்கிறது எல்லாம் சரிதான். நம் குடும்ப நிலவரம் ரொம்ப மோசமாகத் தானிருக்கு என்பதும் எனக்குத் தெரியாததல்ல. இருந்தாலும் அவர்களை வராதே என்று சொல்ல முடியுமா!"

ரௌத்ரத்துடன் குறுக்கிட்டாள் விஜயம்:—"இந்த மாதிரி ஒன்றுக்கும் தைரியமில்லாமல், பயந்து சாவதினால் தான் நாம் இப்படி கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. அவர்களை வரவழைத்தீர்களானால் எனக்குக் கெட்ட கோபம் வரும். வரவேண்டாம் என்று எழுதிவிடுங்கள்!"

"அப்படியா சொல்கிறாய்! நீ சொல்வதும் சரிதான். ஆனால் எப்படி எழுதுவது! 'நீங்கள் இங்கு வரக்கூடாது' என்று முகத்தில் அடித்தாற் போல் எழுத முடியுமா!"

"இதுதானா பிரமாதம்! முகத்திலடிக்கிறாப் போல் எழுதாமல் நாசூக்காய் எழுதுகிறது! 'என்னைப் பெங்களூருக்கு மாற்றுவார்கள் போலிருக்கிறது. அடுத்தவாரம் புறப்படும்படி இருக்கும். விஜயத்தையும், குழந்தைகளையும் கூடவே அழைத்துக் கொண்டு போகப் போகிறேன். பிழைத்துக் கிடந்தால் அடுத்த வருஷம் உத்ஸவம் பார்த்துக் கொள்ளலாம்' என்று எழுதுங்களேன்."

"சரி, எழுதி விடலாம்! ஆனால் நாம் பெங்களூருக்குப் போகவில்லை என்பது பிற்பாடு அவர்களுக்குத் தெரிந்து விட்டால் ரொம்ப அசிங்கமாகப் போய்விடுமே!"

"என்ன குடி முழுகிவிடும்! 'பெங்களூருக்குப் போகச் சொன்னார்கள் ஆபீஸில். அப்புறம் வேண்டாம் என்று சொல்லி விட்டார்கள்' என்று சொல்லிவிட்டால் போச்சு!"

"ஆகா, விஜயம். நீ எவ்வளவு புத்திசாலி! குடும்பத்தில்தான் உனக்கு எத்தனை கருத்து! என்னிடம்தான் எத்தகைய கரிசனம்! உலகத்தில் வேறு எவனுக்கும் எனக்கு வாய்த்ததைப் போல் மனைவி வாய்த்திருக்க முடியாது!"

பெருமையினால் விஜயத்தின் தோள்கள் பூரித்தன. ஆனந்தத்தால் அவள் முகம் மலர்ந்தது. தான் சொன்னபடி செய்யக் கணவன் சம்மதித்து விட்டான் என்று புன்னகையுடன் "போதும்! ரொம்பவும் முகஸ்துதி பண்ணி விடாதீர்கள்! ஆகவேண்டிய காரியத்தைக் கவனியுங்கள். இன்றைக்கே ஊருக்குக் கடிதாக நான் சொன்ன மாதிரி எழுதி விடுங்கள்!" என்றாள்.

"கடிதாக நீதான் எழுத வேண்டும். நான் எழுதக் கூடாது!" என்றான் சேதுராமன்.

"நன்றாயிருக்கே, நீங்கள் சொல்வது! உங்கள் அப்பா அம்மாவுக்கு நீங்கள் எழுதுவதா, நான் எழுதுவதா!" என்று அதிசயித்தாள்.

"என் அப்பா அம்மாவா! நீ என்ன சொல்லுகிறாய்!" என்றான் வியப்புடன்.

"உங்கள் அப்பா அம்மா இல்லாமல் யார் அம்மா அப்பாவாம்!" என்றாள் விஜயம்.

"நீ அப்படியா நினைத்துக் கொண்டிருக்கிறாய்! வருவதாகக் கடிதம் எழுதியிருப்பது உன்னுடைய அப்பாவும் அம்மாவும்தான்! என்னுடைய பெற்றோர்கள் இல்லை!" என்றான் சேதுராமன்.

விஜயத்தின் தலையில் இடி விழுந்த மாதிரி இருந்தது. "எங்க அப்பா அம்மாவா! நீங்கள் அப்படிச் சொல்லவில்லையே!" என்றாள்.

"என் அப்பா அம்மா என்றா நான் சொன்னேன்! பொதுவாக 'அப்பா அம்மா' என்று நான் சொன்னதை நீ தவறாக எண்ணிக்கொண்டு விட்டாய்! அதனால் பாதகமில்லை. என்ன தலையா போய்விடப் போகிறது! இப்போது நீ சொன்ன வாதங்கள், விவரித்த கஷ்டங்கள், எதிர்பார்த்த சங்கடங்கள், பயந்த செலவுகள் இவைகளெல்லாம் உன் பெற்றோர் விஷயத்துக்கும் பொருந்துமல்லவா!" என்றான் சேதுராமன் அமைதியாக.

# "எனக்கு ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள் சுத்தமான காப்பியே வேண்டும்"



"நான் பல வருடங்கள்
சிகப்பு லேபிள் காப்பியை
உபயோகித்திருக்கிறேன்.
அது சிறந்தது என்று
எனக்குத் தெரியும். ஏனெ
ன்றால் அது சுத்தமான
காப்பி. மேலும் அதிக
அளவு காப்பியை அளிக்
கிறது. எந்த விலையில்.
அதைவிட உயர்ந்த காப்
பியை வாங்க முடியாது
என்று எனக்குத் தெரி
யும்."




பல நாள் நறுமணம் மாறு
வண்ணம் காற்றுப்புகாத
டின்களில் அடைக்கப்பட்ட
சிகப்பு லேபிள் சுத்தமான
காப்பி உங்களுக்கு 1, 3, 7
ராத்தல் டின்களில் கிடைக்
கும். சிகப்பு லேபிள் சுத்த
மான காப்பியையே வற்பு
றுத்திக் கேளுங்கள்.

**Stanes** சிகப்பு லேபிள் சுத்தமான காப்பி

STC. 3571

தி யுனைடெட் காப்பி ஸப்ளை கம்பெனி லிட்.,
கோயம்புத்தூர், தென் இந்தியா

கோயம்புத்தூருக்கு ஏஜண்டுகள் :

தி புரொவிஷன் ஸ்டோர்ஸ், ராஜா தெரு

வேலூருக்கு ஏஜண்டுகள் :

மெஸர்ஸ் விஸ்வம் பிரதர்ஸ், கமிஸரி பஜார்

# தாயின் கவலை

கே. வி. முருகன்

நளினி குதித்துக் கொண்டு ஓடி வந்தாள். அவள் உள்ளத்தில் பெருமிதம் பொங்கி ஓடியது. கண்களில் அசாதாரண ஒளி; உதட்டில் உல்லாசம். இவ்வித ஆனந்தத்துக்குக் காரணம் இல்லாமலிருக்குமா! நளினியின் கையில் அன்றையப் பத்திரிகை இருந்தது. அதில் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை முடிவு வெளியாகியிருந்தது. நளினியின் நம்பரும் அதில் காணப்பட்டது. இதுதான் அவள் குதூகலத்துக்குக் காரணம்.

இருக்காதா பின்னே! இந்த முடிவில் நம்பர் வரவில்லையென்பதால் தானே பலர் தற்கொலைக்குக் கூடத் துணிந்து விடுகிறார்கள்! நளினி இரவு பகல் என்று படித்த படிப்பு வீண் போகவில்லை.

ஆனந்தம் பொங்க, தனது தாயாரிடம் ஓடினாள் நளினி. 'அம்மா! நான் பாஸ் பண்ணி விட்டேன்; இதோ பார், பத்திரிகையை! என் நம்பர் கூட இதில் வந்திருக்கிறது' என்று கத்தியே விட்டாள்.

இதைக் கேட்டதும் ஆதரத்துடன் தன்னைக் கட்டிக் கொள்வாள் என்று எதிர்பார்த்து வந்த நளினி ஏமாற்றம் அடைந்தாள். தன் பேரில் பேரன்பு கொண்ட தாய்; தன்னைத் தவிர வேறு குழந்தையே இல்லாததால் தனது அன்பு அத்தனையும் பொழிந்து வளர்த்த தாய், தனது பரீட்சை முடிவைக் கேட்டு எத்தனை குதூகலப்படுவாள் என்று எதிர்பார்த்து வந்த நளினிக்கு, பெருத்த ஏமாற்றம்தான் பரிசாகக் கிடைத்தது.

வசந்தாவின் முகத்தில் சந்தோஷத்தின் அறிகுறி தென்படவில்லை; கவலையின் ரேகை படர்ந்தது, ஏக்கத்தின் சாயல் பிரதிபலித்தது.

தனது ஒரே பெண்; மிகவும் செல்லமாக வளர்க்கப்பட்டவள்; அவள் "பரீட்சையில் 'பாஸ்' செய்து விட்டேன்" என்று ஆனந்தக் கூத்தாடுகிறாள்! வசந்தா — நளினியின் தாயார், குதூகலமடைவதற்குப் பதில் கவலை கொள்வானேன்!

இது நளினிக்குப் புரியவேயில்லை. சற்று முன்பு அவளிடம் காணப்பட்ட குதூகலம், குறுகுறுப்பு எல்லாம் ஓடி மறைந்து விட்டன. ஏக்கத்துடன் தாயின் முகத்தைப் பார்த்தாள். அவளுக்கு அழுகையே வந்துவிடும் போலிருந்தது.

வசந்தாவின் சிந்தனை பின்னோக்கிப் பாய்ந்தது. இன்று அவள் தாய். ஒரு குடும்பத்தின் தலைவி. அன்று! இப்படியாக, கடந்த காலம் அவள் மனத்திரையில் வேகமாக விரிந்தது. 'அன்றும் இதே போலத்தான். வசந்தா பரீட்சையில் பாஸ் செய்த காள், அன்று அவள் வீட்டில் எத்தனை ஆனந்தம். குதூகலம் பெருக்கெடுத்தோடியது! வீடே அல்லோல கல்லோலப் படவில்லையா ஆனந்தத்தால்! வசந்தாவின் தாயும் தந்தையும் அடைந்த ஆனந்தத்துக்கு அளவே இல்லை.' இந்த நிகழ்ச்சிகளில் எண்ணத்தை ஓடவிட்டுக் கொண்டிருந்த வசந்தாவை, 'அம்மா' என்ற நளினியின் அன்புக் குரல் இன்றைய நிகழ்ச்சிக்குத் திரும்ப அழைத்துக் கொண்டு வந்து சேர்த்தது.

"அம்மா! ஏன் இப்படி என்னவோ போலிருக்கிறாய்!" என்று கலங்கிய கண்களுடன் தழுதழுத்த குரலில் நளினி கேட்டாள்.

நளினிக்கு வயது பதினேழை எட்டிவிட்டது. தாய்க்கும் தந்தைக்கும் செல்வப் புதல்வி. அவர்களின் குடும்பம் இன்று பணத்தில் புரள்கிறது என்று கூறுவது மிகையாகாது! எல்லாவித வசதிகளும் உண்டு. கார், பங்களா, கூப்பிட்ட குரலுக்கு 'ஏன்!' என்று கேட்க ஆள். சமையலுக்கு ஆள். இத்தியாதி வசதியோடு வாழ்க்கை நடத்துகின்றனர். அப்படியிருக்க அம்மாவுக்கு வந்த கவலை என்ன! இது நளினிக்குப் புரியாத, புரிந்துகொள்ளமுடியாத புதிராக இருந்தது.

வசந்தா தன்னை சுதாரித்துக் கொண்டாள். "குழந்தாய் நளினி! நீ 'பாஸ்' பண்ணி விட்டதைக் கேட்டவுடன் எனக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லையம்மா. அதுதான் இப்படியாகித் திகைத்து நின்று விட்டேன்" என்றாள்.

நளினு புத்திசாலிப் பெண். தாயின் இந்தப் பதில் அவளைத் திருப்தி செய்யவில்லை. தாயின் கவலைக்குக் காரணம் ஏதோ ஒன்றிருக்கிறது என்பதை அவள் சுலபமாக ஊகித்தாள். 'அம்மா! உன் கவலைக்குக் காரணத்தை என்னிடம் கூறக் கூடாதா!' என நடுங்கும் குரலில் கேட்டாள். அவள் குரலில் ஆர்வமும், ஆதுரமும் கலந்திருந்தன.

வசந்தா சற்று நேரம் பேசாமல் இருந்தாள். பிறகு "உட்கார், நளினி கூறுகிறேன். என்றைக்காவது ஒருநாள் உன்னிடம் கூறவேண்டுமென்று தான் இருந்தேன். அதை இன்றே கூறி விடுகிறேனே!" என்று ஆரம்பித்தாள்.



ஏதோ கதை கூறப்போகிறாள் தாயார் என்று ஆவலோடு நளினி உட்கார்ந்தாள்.

"அம்மா நளினி! நான் கூறப் போகும் சம்பவம் நடந்து பல வருஷங்கள் ஆகி விட்டன.

உன்னைப் போன்ற ஒரு பெண்ணின் சரித்திரத்தைக் கூறப்போகிறேன். அவளும் உன்னைப்போல பெற்றோர்களுக்கு ஒரே புதல்விதான். நிறைய நிதி படைத்தவர்கள் என்று கூற முடியாவிட்டாலும், சுமாரான குடும்பம். செல்வத்தில் புரளும் குடும்பம் என்று கூற முடியாது என்ற போதிலும், அந்தப் பெண்ணைச் செல்லமாக வளர்த்தார்கள், நாங்கள் உன்னை வளர்ப்பதைப்போல.

அந்தப் பெண்ணின் தாயாருக்கு ஒரே ஒரு ஆசை! நல்ல எண்ணத்தினின்றும் எழுந்த அந்த ஆசையின் காரணமாகப் பின்னால் அந்தப் பெண் அனுபவிக்கப் போகும் கஷ்ட நஷ்டங்கள், அப்போது அவள் பெற்றோர்களுக்குப் புலனாகவில்லை.

'தன் பெண்ணை நிறையப் படிக்க வைக்க வேண்டும். நன்றாகப் படித்த ஒரு மாப்பிள்ளையைப் பார்த்துக் கல்யாணம் செய்து வைக்க வேண்டும்' என்கிற ஒரே ஆசைதான் அந்தத் தாயின் உள்ளத்தில் இருந்தது. அதன் காரணமாக அந்தப் பெண்ணைக் கல்லூரியில் சேர்த்து விட்டார்கள். அந்தப் பெண்ணும் உன்னைப்போல் நன்றாகப் படித்தாள். உன்னைப் போலவே மிகவும் அழகான பெண்ணும் கூட.

'போ! அம்மா!' என்று கனிவி சிணுங்கினாள். வசந்தா தொடர்ந்தாள்:—அப்போது அந்தப் பெண்ணைப் பலர் விரும்பிப் பார்க்க வந்தனர். எத்தனையோ உயர்ந்த இடங்களிலிருந்தெல்லாம் வரன்கள் போட்டியிட்டு வந்தன. ஆனால் தாயாருக்குத் தன் பெண்ணுக்கு அப்போது கல்யாணம் செய்ய இஷ்டமில்லை. தன் பெண் பி. ஏ.யை முடித்த பின்தான் கல்யாணத்தைப் பற்றி முடிவு செய்வது என்று நிச்சயமாகத் தீர்மானித்தாள். அவள் தப்புக் கணக்குப் போட்டு விட்டாள். அதன் பலனைப் பின்னால் அந்தப் பெண் அனுபவிக்கும்படி நேர்ந்து விட்டது.

இன்றே தன் பெண்ணுக்கு இத்தனை கிராக்கியிருக்கிறதே! பி. ஏ.யை முடித்து விட்டாளானால், இன்னும் எத்தனை பெரிய பெரிய இடங்களெல்லாம் வந்து மோதும், என்பதாக நினைத்தாள்.

அவள் கணவர் குறுக்கிட்டு, இப்போதே விவாகத்தை முடித்துவிட்டால் தங்கள் பாரம் நீங்கிவிடும் என்று ஏதேதோ கூறினார். அவரையும் வாயடைக்கச் செய்து விட்டாள் அந்தத் தாய்!

இதற்கெல்லாம் காரணம், அவள் தன்னுடைய பெண்ணின் பேரில் கொண்டிருந்த அளவற்ற அன்புதான். தன் பெண்ணை வருங்காலத்தில் மிக உன்னத நிலையில் வைத்துப் பார்த்துக் கற்பனை செய்து கொண்டிருந்தாள்.

அவள் விருப்பமும் ஓரளவு பூர்த்தியாயிற்று. அவள் பெண் கல்லூரிப் படிப்பை முடித்துக் கொண்டாள். பி. ஏ.யில் தேறி விட்டாள். அதுவும் முதல் வகுப்பில் தேறினாள். தாய்க்கு நிலை கொள்ளவில்லை. ஆனந்தம் கரை புரண்டோடியது. இனி வரன் தேடலாம் என்று கணவனுக்கு அன்புக் கட்டளை யிட்டாள்.

வரன் தேடச் சொல்லித் தன் கணவனிடம் சுலபமாகக் கூறிவிட்டாள். ஆனால் வரன் தேடும் படலத்தில் அவர் பட்டபாடு அவருக்குத்தான் தெரியும். இப்போது உள்ள சமூக அமைப்பு பெரிய விரோதியாக அவர் முன் நின்றது!

பெண் பி. ஏ. படித்திருக்கிறாள். அவளுக்குத் தகுந்த வரன் தேட வேண்டும்! குறைந்த பட்சம் பி. ஏ. படித்த பையனாகவாவது வேண்டும். அப்படிப் பார்க்கும்போது பி. ஏ. எம். ஏ. படித்தவர்களெல்லாம் ஏற்கெனவே கல்யாணமாகி விட்டிருந்தனர். பெண்களை வைத்திருப்பவர்கள், கண்களில் விளக்கெண்ணெயைப் போட்டுக் கொண்டல்லவா தேடுகிறார்கள். அவர்கள் எப்படி பி. ஏ.க்களையும். எம். ஏ.க்களையும் பிரம்மச்சாரிகளாக இருக்க வைத்திருப்பார்கள்!

தப்பித் தவறி ஒருவர் கிடைக்கும் போது, அவர்கள் கல்யாண மார்க்கெட்டில் உயர்ந்த ஏலத் தொகையை எதிர்பார்த்து நிற்பவர்களாகவே இருந்தார்கள். அவர்கள் 'பத்தாயிரத்தைக் கொண்டா! பதினையாயிரம் தருகிறாயா!' என்றெல்லாம் கேட்டனர். இவ்விதச் சூழ்நிலையில், பரிதாபத்திற் குரிய அந்தப் பெண்ணின் தகப்பனார் ஒன்றும் புரியாமல் தவித்தார்.

பெண் நல்ல அழகிதான்; படித்தவள். இதையெல்லாம் யார் பார்க்கிறார்கள்! 'என் பிள்ளை எம். ஏ. படித்திருக்கிறான். அவனுக்குப் பெரிய பெரிய இடங்களிலிருந்தெல்லாம் நான், நீ என்று போட்டி போட்டுக் கொண்டு பெண் தர முன் வருகின்றனர். உமது பெண்ணுக்கு நீர் பத்தாயிரம் தர முடியுமா!' இவ்விதக் கேள்விகளை பெண்ணின் தந்தையிடம் வீசப்பட்டது! அவர் பத்தாயிரத்துக்கு எங்கே போவார்!

இப்படியாக இரண்டு வருடம் அலைந்தார்; கஷ்டப்பட்டார். அப்போதெல்லாம் அவர் மனைவியைச் சபித்துக் கொள்வார். அப்பெண்ணுக்கோ வயது ஏறிக்கொண்டே சென்றது. இனி அவள் வாழ்நாள் இவ்விதமே செல்ல வேண்டியதுதானா! என்ற தீர்க்க முடியாத பிரச்னை ஏற்பட்டது!



அந்தப் பெண்ணானால் இதுபற்றித் துளிக்கூடக் கவலைப் பட்டதாகத் தெரியவில்லை. அவளுக்குத் தன் தோழிகள், கிளப், மீட்டிங் இப்படியாகப் பொழுது போய்க் கொண்டிருந்தது. யார் யாரோ எதை எதையோ பேசினர்! ஊரார் நாலும்பேசத் தானே செய்வார்கள்!

இவ்விதப் பேச்சுகளெல்லாம் முதலில் அப்பெண்ணின் காதில் படும்போது, மனத்துக்குக் கஷ்டமாகத்



# காந்தி வித்தியாலயம்

★ ★ ★

● தஞ்சை ஜில்லா திருச்சிற்றம்பலம் என்னும் கிராமத்தில் காந்தி அடிகளின் ஆதாரக் கல்வித் திட்டத்தை முழுதும் பின்பற்றி ஸ்ரீ மு. அருணாசலம் காந்தி வித்தியாலயம் நடத்தி வருகிறார். இதையொட்டி ஆதாரப் பயிற்சிக் கலாசாலையும் நடந்து வருகிறது. பெரிய சர்க்கார் உத்தியோகத்தில் இருந்த ஸ்ரீ மு. அருணாசலம் ஆதாரக் கல்வித் திட்டத்தில் கொண்ட பற்றுக் காரணமாகவே உத்தியோகத்திலிருந்து விலகி இந்த அருமையான தொண்டில் ஈடுபட்டவர். அவருடைய பெரு முயற்சிக்கு ஊக்கம் அளிக்கும் நோக்கத்துடன், ராஜாஜி ஜூலை 29உ யன்று மிக்க சிரமம் எடுத்து ரயில்வே நிலையத்திலிருந்து வெகு தூரத்திலுள்ள திருச்சிற்றம்பலம் சென்று காந்தி வித்தியாலயத்தைப் பார்வையிட்டார். ஸ்ரீ மு. அருணாசலத்தின் கல்வித் தொண்டைப் பெரிதும் பாராட்டினார். இந்த வைபவத்தின்போது ஸ்ரீ மு. அருணாசலம் ராஜாஜியை வரவேற்றுப் பேசுவதையும் இரண்டு குழந்தைகள் பிரார்த்தனை கீதம் பாடுவதையும் படத்தில் காணலாம். ●

---

தான் இருந்தது. ஆனால் நாளாக, நாளாக அவன் அவைகளை எதுவும் சட்டை செய்வதில்லை.

கடைசியில் அவளுக்கும் ஒரு இடத்தில் நிர்மானமாயிற்று. பிள்ளை டெல்லியில் சர்க்கார் உத்தியோகத்திலிருப்பதாகவும், பெற்றோர்கள் யாரும் இல்லையென்றும் கூறினார்கள்.

அதுவும் ஒரு விதத்தில் நல்லதென்றே எண்ணினான். மாமியார் உபத்திரவம் இல்லாமல் காலத்தை ஓட்டலா மல்லவா!

கல்யாணம் சிறப்பாக நடந்தேறியது. மணம் முடிந்த சில தினங்களிலேயே பெண், கணவருடன் டெல்லிக்குப் புறப்பட்டாள். பெண்ணின் தாய்க்கு ஒரு வகையில் சற்று மனக்குறைவாகத் தான் இருந்தது. தன் பெண் தனது அருகில் இருக்கவில்லையே; பக்கத்து ஊராயிருந்தாலும் அடிக்கடி சென்று பார்த்துக் கொள்ளலாம்; டெல்லிக் கல்லவா செல்கிறாள்! என்ற குறைதான்.

கல்யாணம் முடிந்த சில தினங்களிலே செல்லமாக வளர்ந்த தன் மகள் தனிக் குடித்தனம் நடத்தப் போகிறாளே என்ற கவலையும் தாய்க்கு இருந்தது. குடித்தனம் நடத்தும் விதத்தைப் பற்றித் தான் ஒன்றும் கற்றுக் கொடுக்காத தப்பிதத்தை அப்போதுதான் உணர்ந்தாள்.

பெண்ணுக்கானால் அந்தக் கவலை யெல்லாம் கிடையாது. 'டெல்லிக்குச் செல்லப் போகிறோம்' என்ற ஒரே குதூகலந்தான். தன் தோழிகளிடமெல்லாம் கூறிப் பெருமைப்பட்டுக் கொண்டாள்.

சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ் புறப்பட்டது. அன்றைய ரயில் அந்தப் புதுத் தம்பதிகளைச் சுமந்து கும்மாளி போட்டுக் கொண்டு சென்றது.

வண்டி புறப்படச் சற்று முன்னம் பெண்ணின் தந்தை மாப்பிள்ளையிடம், 'பெண் செல்லமாய் வளர்ந்தவள். தப்பிதங்கள் எதுவும் செய்தால் அதைத் திருத்த வேண்டியது உங்கள் கடமை தான். இனி நீங்கள்தான் பெண்ணுக்குத் தாயும் தந்தையும்' என்று கண்களில் நீர்மல்கக் கூறினார். எல்லாத் தந்தைமார்களும் இப்படிக் கூறுவது சகஜந்தான்; என்றாலும் அந்தப் பெண்ணைப் பொறுத்தவரை, அவர் கூறுவதில் உண்மை இருக்கத்தான் செய்தது.

இரண்டு பகல், இரண்டு இரவுகள் ரயில் ஓடிற்று. இரண்டு தினங்கள் ரயிலில் கழித்த பிறகு, மூன்றும் நாள் டெல்லியில் வந்து இறங்கினார்கள். வழியெல்லாம் வேடிக்கை பார்த்துக் கொண்டே, ஒவ்வொரு ஊரைப் பற்றியும் கேட்டுக் கொண்டே வந்தாள். அதனால் அவளுக்கு ஒருவித அலுப்பும் தோன்றவில்லை.

டெல்லி ஸ்டேஷனை விட்டு வெளியில் செல்லும் போது, அந்தப் பெரிய நகரின் அமைப்பு பற்றியும், அங்குள்ள மனிதர்களையும் வேடிக்கைப் பார்த்துக் கொண்டே சென்றாள். தான் முற்றிலும் புதிதான ஒரு இன்ப புரியில் நுழைந்து விட்டதாக எண்ணி உள்ளம் பூரித்து மகிழ்ந்தாள். 'கரோல் பாக்' போய்ச் சேர்ந்தார்கள்.

டெல்லியில் 'கரோல்பாக்'கில் தென்னிந்தியக் குடும்பங்கள் பல இருந்தன. அதனால் அங்கேயே இவர்களுக்கு வீடு பார்த்து வைத்திருந்தனர் அவளது கணவனின் நண்பர்கள்.

தனது வாசத்துக்கு, தான் குடித்தனம் நடத்துவதற்கென்று பார்த்து அமர்த்தப்பட்டுள்ள வீட்டை அடைந்தாள்; பார்த்தாள். அடுத்த கணம் திடுக்கிட்டாள்.

ஒரு பெரிய வீட்டில், ஒரு சிறு பகுதி இவர்களுக்கென வாடகைக்குப் பிடித்திருந்தார்கள். அந்த வீட்டின் இதர பகுதிகளில் சுத்தமாகத் தமிழ் தெரியாத வட இந்தியக் குடும்பங்கள் குடியிருந்தனர். அவர்கள் பேசுவது, சிரிப்பது, அழுவது எல்லாம் ஹிந்தியில் தான்! அவர்களெல்லாம் இந்தப் பெண்ணை அதிசயத்துடன் வேடிக்கை பார்த்தனர். தான் இந்த வீட்டில்தான்—பரந்த உலகில் இந்தக் குறுகிய பொந்தில்தான்—குடும்பம் நடத்த வேண்டும் என்பதை எண்ண எண்ண அவள் மனம் சஞ்சலப்பட்டது.

அவள் கணவன் குழாயடிக்குச் சென்று ஸ்நானத்தை முடித்துவிட்டு, ஹோட்டலில் சென்று காலை டிபன் வாங்கி வந்தார். இருவரும் சாப்



பிட்டு முடிந்தபின் அவர் ஆபீஸுக்குத் தன் கடமையை ஆற்றச் சென்று விட்டார்.

ஆயிற்று! இனி சமையல் செய்ய வேண்டும். அதற்கு வேண்டிய சாமான்களெல்லாம், தனது அந்தச் சிறிய அறையாகிய வீட்டில், கொஞ்சம் கொஞ்சம் வாங்கி ஒழுங்காக வைக்கப்பட்டிருந்ததை அவள் கண்டாள்.

இப்போது அவள் முன் பெரிய கேள்விக்குறி ஒன்று தோன்றி நின்றது. அவளுக்குச் சமைக்கத் தெரியாது! அன்று வரை அவள் அடுப்படியில் நின்றவளில்லை! அவளுடைய தாயும் அவளை அது வரை சமையல் கட்டில் அண்ட விட்டவளில்லை.

ஏதடா! நமது பெண், எத்தனை செல்லமாய் வளர்த்தாலும் ஒரு நாளைக்குத் தனது கணவன் வீடு போக வேண்டியவள்தானே! அங்கு சென்றவுடன், இப்படி ஒருநாள் திகைத்து நிற்கவேண்டி வருமே! திண்டாடுவாளே! அன்று நாம் கூட இருக்க மாட்டோமே! என்றெல்லாம் அவள் தாய் ஒருநாள்கூட எண்ணிப் பார்க்கவில்லை. அது விஷயத்தில் சிரத்தை எடுத்துக் கொள்ளவுமில்லை; கவலை கொண்டவளுமில்லை.

இப்போது அப்பெண்ணின் முன்னால் அடுப்பு இருக்கிறது. சமையலுக்கு வேண்டிய சாமான்கள் இருக்கின்றன. ஆனால் சமையல் செய்ய வேண்டுமே! அதுதான் அவளுக்குத் தெரியவே தெரியாதே! அவளுக்கு அழுகை அழுகையாக வந்தது. அந்தப் பெண்ணின் வாழ்நாளில் அன்றுதான் முதல் தடவையாக மனம் குமுறி அழுதாள்! அவளுக்குத் தன் தாயின்பேரில் ஆத்திரம் ஆத்திரமாக வந்தது! என்ன செய்வது!

இவள் வந்துள்ள செய்தி கேட்ட, 'கரோல் பாக்'கில் வசிக்கும் தென்னிந்தியக் குடும்பங்களி[illegible]ன பெண்மணிகள், தங்கள் தங்கள் சமையல் வே[illegible]யை முடித்துவிட்டு இவளைப் பார்க்க வந்த[illegible] அவர்களைக் கண்டதும் ஒருவாறு அழுகையை [illegible]த்திக் கொண்டாள்.

அவளுடைய கலங்கிய கண்களையும், அழுதழுது வீங்கிப்போயிருந்த முகத்தையும் கண்ட அவர்கள், இதற்கு வேறு விதமாக அர்த்தம் செய்து கொண்டனர். அவளுக்குத் தேறுதல் கூறினர்.

'கலங்காதேம்மா! நாங்களெல்லாம் இல்லையா! இனிமேல் அம்மா, அப்பாவை நினைத்துக் கொண்டிருக்கலாமோ! எல்லாம் கொஞ்ச நாளைக்கு அப்படித்தானிருக்கும்! வரவர சரியாய்ப் போய் விடும்' என்று தேற்றினர்.

அவர்கள் இப்படிக் கூறக் கூற அவள் அதிகமாகப் பொருமினாள். வந்தவர்களும் தாங்கள் நினைத்தது சரியென்று எண்ணினர்.

வந்தவர்களில் ஒரு வயதான மாது, அந்தப் பெண் ரயிலில் வந்த அலுப்புடன் சமைப்பது கஷ்டம் என்று நினைத்து, அப்போதைக்குத் தானே சமைத்துக் கொடுப்பதாகக் கூறி வேலை பார்க்க ஆரம்பித்து விட்டாள். அந்தப் பெண் கூட ஒத்தாசை செய்தது. அந்தச் சிறிய வேலைகூட அவளால் சரிவரச் செய்ய இயலவில்லை. தட்டுத் தடுமாறினாள். அவளுடைய இவ்வித தடுமாற்றம் பெற்றோரின் பிரிவினால் ஏற்பட்ட துயரம்தான் என்று அந்த வயோதிக மாதும் கருதினாள்.

அன்று மாலை. ஆறு மணிக்கெல்லாம் அந்தப் பெண்ணின் கணவர் வீட்டுக்கு வந்தார். அங்கே அவள் அழுது அழுது அலங்கோலமாகக் கிடக்கும் காட்சியைக் கண்டார். அவரும் எல்லோரும் நினைத்தது போலத்தான் நினைத்தார். தேறுதல் கூறினார். 'பார்! இன்று இப்படித்தான் பெற்றோர்களை நினைத்து அழுவாய். இன்னும் சில நாட்களில் நீயே உனது தாய் தந்தையை மறந்து விடப் போகிறாய்! அப்புறம் நான் ஞாபகப்படுத்த நேரிட்டாலும் ஆச்சரியப் படுவதற்கில்லை' என்று வேடிக்கையாகப் பேசினார்.

அவருடைய அன்புப் பரிகாசம் அப்பெண்ணை மேலும் வேதனைக்குள்ளாக்கியது. கேவிக் கேவி அழுதாள். அவரும் எத்தனையோ வகைகளில் எடுத்துக் கூறினார். அவர் அப்படிக் கூறக் கூற அவளுடைய அழுகை அதிகமாயிற்றே தவிர சிறிதும் குறைந்த பாடாயில்லை.

அந்தப் பெண் தனது கணவரின் பொறுமையைச் சோதித்தே விட்டாள். அவரும் கடைசியில்

• • •

டில்லி சர்வ கலாசாலையில் தாவர சாஸ்திர பேராசிரியராக இருக்கும் டாக்டர் எஸ். நாராயணசாமி எம். எஸ்ஸி; பிஎச். டி. அவர்கள் உபகாரச் சம்பளமும், பிரயாண வசதியும் பெற்று, அமெரிக்காவிலுள்ள மிசிகன் சர்வ கலாசாலையில் விசேஷ தாவர ஆராய்ச்சிகள் புரியச் செல்கிறார். ஏற்கெனவே, அவர் கரும்பு, பருத்தி, சோளம் முதலிய தாவரப் பொருள்களில் விசேஷ ஆராய்ச்சிகள் நடத்தியிருக்கிறார். டாக்டர் எஸ். நாராயணசாமி மகாகவி பாரதியாரின் பேரப் பெண்ணின் கணவர் ஆவர். இவர் ஈடுபட்டிருக்கும் காரியத்தில் வெற்றிகிட்டுவதாக!

• • •



பொறுமையிழந்து, 'ஆபீஸில் அலுத்துப் போய் வரும் எனக்கு, வீட்டில் வந்ததும் உன்னைச் சமாதானப் படுத்தும் வேலை வேறு புதிதாக சேருகிறது என்றால் கல்யாணமே செய்திருக்க மாட்டேனே!' என்று சலித்துக் கொண்டார்.

'இதோ பார்! இப்படி நீ அழுது கொண்டே இருந்தால் நாளை ரயிலிலேயே உன் பெற்றோர்களிருக்குமிடத்துக்கு உன்னை ஏற்றி அனுப்பி விடுகிறேன்' என்றார் கோபத்தோடு.

அந்தப் பெண் அவர் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, அழுது கொண்டே கூறினாள்: 'என்னை மன்னித்து விடுங்கள்! எனக்குச் சமைக்கத் தெரியாது' என்று.

அவர் சிரித்தார். 'அடி அசடே! இதற்குத் தானா அழுது சாகிறாய். அழாதே! கவலையை விடு. உன்னைக் கல்யாணம் செய்வதற்கு முன் நானே தான் சமைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். இப்போது வேண்டுமானால் உனக்கும் சேர்த்து இரண்டு பேருக்குமாகச் சமைத்து விடுகிறேன். மேலும் உன்னுடைய தந்தை நம்மை வழியனுப்பும்போது என்னிடம் கூறினாரே! ஞாபகம் இருக்கிறதா! 'நீங்கள்தான் இனி அவளுக்குத் தாயும் தந்தையும்' என்று! முதலில் தாயின் பொறுப்பை ஏற்றுக் கொள்கிறேன். உன் தாயார் உனக்குச் சொல்லிக் கொடுக்காத வித்தையை, நான் உன் தாயார் ஸ்தானத்திலிருந்து கற்றுக் கொடுக்கிறேன். எழுந்திரு. கண்களைத் துடைத்துக் கொள். எங்கே என்னைப் பார்த்துக் கொஞ்சம் சிரி! கல்யாணம் செய்தும் பிரம்மச்சாரி என்பது என் வரையில் சரியாகி விட்டது!' என்று கூறிக் கலகலவென்று சிரித்தார்.

அவளுக்கு அவமானம் தாளமுடியவில்லை. கணவரின் பெருந்தன்மையும், அன்பு மொழிகளும் அவள் உள்ளத்திற்கு இதமாக இருந்தன. 'நீங்கள் தான் என் கடவுள்' என்று மீண்டும் கணவன் காலடியில் வீழ்ந்தாள்.

அவள் வாழ்நாளில் அன்று அனுபவித்த அந்தக் கொடிய வேதனையை அவள் அதிக நாள் அனுபவிக்க நேரிடவில்லை. பதினைந்தே நாட்களில் நன்றாகச் சமைக்கக் கற்றுக் கொண்டு விட்டாள். அந்தப் பதினைந்து நாளும் அவள் கணவரே அவளுக்கும் சேர்த்துச் சமைத்தார்.

நளினி! அந்தப் பெண்ணுக்கு ஏற்பட்ட அந்தக் கொடிய வேதனை, உனக்கும் ஏற்பட்டு விடக் கூடாதே என்று தானம்மா நினைத்தேன். அதனால்தான் என்னால் உனது பரீட்சை வெற்றி மகிழ்ச்சியில் பங்கு கொள்ள முடியவில்லை!"

வசந்தாவின் கண்களை நீர்த் திவலைகள் மறைத்து நின்றன. கேட்டுக் கொண்டிருந்த நளினி திகைப்பு நீங்கியதும், "யாரம்மா அந்தப் பெண்! எனக்கு விவரமாகச் சொல், அம்மா!" என்றாள் ஆவல் நிரம்பிய கண்களுடன். அவள் குரலில் மிகுந்த படபடப்பு காணப்பட்டது.

"வேறு யாருமில்லையடி கண்ணே! உனது அம்மாவாகிய இந்த வசந்தாதான்! அப்புறம் உன் தந்தையாரின் உண்மையான உழைப்பால் அவர் நிலை உயர ஆரம்பித்தது. உன் அப்பா சென்னைக்கு வந்தார். சொந்தத்தில் வியாபாரம் ஆரம்பித்தார். உன் அப்பாவுக்குத் தன்னம்பிக்கை அதிகம். எந்தக் காரியத்திலும் ஈடுபட மாட்டார். ஈடுபட்டு விட்டால் அதிலேயே தன்னை மறந்து விடுவார். அவரிடம் வறட்டுக் கௌரவம் கிடையாது. காரியம்தான் பெரிதே ஒழிய வீரியம் பெரிதல்ல என்று அடிக்கடி சொல்லுவார். அதைத் தம்முடைய வாழ்க்கையிலேயே நடத்திக் காட்ட ஆரம்பித்தார். வியாபாரத்தில் நியாயத்தையும் நேர்மையையும் கடைப்பிடித்தார். பொதுமக்களுக்குத் தொண்டாற்றும் சிறந்த நோக்கத்துடனேயே வியாபாரத்தை நடத்தி வந்தார். அதனால் ஜனங்களுக்கும், சக வியாபாரிகளுக்கும் அவரிடம் நம்பிக்கை பிறந்தது. அது காரணமாக வியாபாரம் வளர்ந்தது. இரண்டு மூன்று ஆட்களை வைத்துக் கொண்டு ஆரம்பித்து நடத்திய வியாபாரம் இருபது முப்பது ஆட்களை வைத்துக் கொண்டு நடத்த வேண்டியதாயிற்று. செல்வம் பெருகிற்று. நீயும் பிறந்தாய்" என்று கூறினாள்.

நளினிக்கு ஆச்சரியமாய் இருந்தது. அவள் புத்திசாலிப் பெண். அம்மாவின் கவலையை அந்தக் கணமே அறிந்து கொண்டாள்.

"அம்மா! நான் படிப்பை நிறுத்தி விடுகிறேன். இன்று முதல் எனக்குச் சமைக்கக் கற்றுக் கொடு, அம்மா!" என்றாள். அவள் கூறியது இன்ப கீதமென வசந்தாவின் காதில் ஒலித்தது. அப்படியே நளினியைக் கட்டிக் கொண்டாள். அவள் கண்களிலிருந்து இரண்டு பெரிய நீர்த் துளிகள் முத்துப்போல் உருண்டோடின.

"நளினி! என் கண்ணே! நீ சமைக்கக் கற்றுக் கொண்டால் போதும்; படிப்பை நிறுத்த வேண்டாமம்மா!" என்ற சொல் வசந்தாவின் வாயிலிருந்து வந்தது. நளினி தன் அருமைத் தாயாரை இறுக அணைத்துக் கொண்டாள்.




அவனுடைய வெற்றிக்குக் காரணம் திடமான பயிற்சியே. அதுபோலவே அவன் வெற்றிக்குக் காரணமாயிருந்ததில் முக்கியமானது அவனுடைய உணவு உண்மையாகவே இந்த வெற்றிக்கு வேண்டிய அளவு ஊக்கமும் பலமும் அவனுக்குக் கொடுத்தது அவனது உணவுதான். அவனுடைய உணவில் எப்பொழுதும் அதிக பலம் இருந்தது

அவனுடைய உணவு சமைக்கப்பட்டிருந்தது




**துஷார்**
**வனஸ்பதியில்**

இரட்டிப்பாக சுத்தப்படுத்தி கைபடாமல் செய்யப்பட்ட வனஸ்பதி ஆரோக்கியமான முறையில் பாக் செய்யப்பட்டது.

துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட். கர்னூல்.

# ஐரோப்பாவில் உருவான புதிய நாடு

ஜெயமணி

செக்கோஸ்லோவேகியாக் குடியரசு ஐரோப்பா நாடுகளின் மத்தியில் அமைந்திருக்கிறது. இந்த நாடு முதலாவது உலக மகாயுத்தத்துக்குப் பின் புதிதாகச் சிருஷ்டிக்கப் பட்டதாகும். பழைய ஆஸ்திரியா-ஹங்கேரி சாம்ராஜ்யத்துக்கு உட்பட்டிருந்த பல பாகங்கள் சேர்ந்தே செக்கோஸ்லோவேகியா தேசமாக உருவாகி யிருக்கிறது.

செக் நாட்டின் மேற்குப் பாகமான பொஹீமியாவில் செக் ஜாதி மக்கள் இருக்கின்றனர். மேற்படி நாட்டின் கிழக்குப் பாகமான ஸ்லோவேகியாவில் ஸ்லோவேகியர்கள் வசிக்கிறார்கள். அதனாலேயே அந் நாட்டுக்குச் செக்கோஸ்லோவேகியா என்ற பெயர் சூட்டப் பட்டிருக்கிறது.

எட்டாவது நூற்றாண்டு வரையில் அப் பிரதேசத்தின் சரித்திரம் என்ன என்பது தெளிவாகத் தெரிய வில்லை. ஆனால் சற்றேறக் குறைய கிறிஸ்துவ சகாப்தம் எண்ணூறாம் வருஷத்தில் மாய்மீர் என்ற மலை ஜாதியினரின் தலைவன் ஸ்லோவேகியாவில் ஒரு பெரிய சாம்ராஜ்யத்தை ஸ்தாபிப்பதில் வெற்றி பெற்றதாகத் தெரிகிறது. அந்தக் காலத்தில்தான் கிரேக்கப் பாதிரிமார்கள் ஸ்லோவேகியாவில் கிறிஸ்துவ மதத்தைப் பரப்பத் தொடங்கினார்கள்.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் ஹங்கேரியில் குடியேறிய மாக்யார் என்ற ஒரு வகை ஜாதியார் மாய்மீர் ஸ்தாபித்த சாம்ராஜ்யத்தைத் தகர்த்து விட்டார்கள். 905-ம் ஆண்டில் மேற்படி சம்பவம் நிகழ்ந்தது.

அதிலிருந்து பல நூற்றாண்டுகள் வரையில் ஸ்லோவேகியர்கள் மாக்யார் ஆட்சியின் கீழ் இருந்து வந்தனர். பிறகு அப்பிரதேசம் ஜெர்மன் சக்கரவர்த்தியின் ஆதிக்கத்துக்கு இலக்காக நேர்ந்தது.

* * *

அக்காலத்தில் பொஹீமியாப் பிரதேசம் ஐரோப்பாவிலேயே மிகவும் முக்கியத்துவம் பெற்று விளங்கியது. பொஹீமியா மன்னர்கள் தங்கள் நாட்டில் வந்து குடியேறும்படி ஜெர்மன் வியாபாரிகளையும் கைத்தொழில் நிபுணர்களையும் வருந்தி அழைத்தார்கள்.

1347—ல் பொஹீமியா மன்னர் சார்லஸ் ரோமிய சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியானார். அவரது ஆட்சி செக் மக்களுக்குப் பெரும் வரப் பிரசாதமாக அமைந்தது. அவர் தமது ஆட்சிக் காலத்தில் பல பிரதேசங்களைக் கைப்பற்றிப் பொஹீமியாவுடன் சேர்த்துக் கொண்டார்.

எனினும் அவர் காலமான பிறகு வெகு காலம் வரையில் பொஹீமியாவில் மதச் சண்டைகள் ஏற்பட்டு அந்த நாட்டைச் சீர் குலைத்து வந்தன.

அந்தச் சண்டைகளின் விளைவாகப் பொஹீமியாவில் ஆஸ்திரியா மன்னரின் ஆட்சி ஏற்படவே, அதைப் பொஹீமியர்கள் எதிர்த்துப் போராட முற்பட்டார்கள்.

அந்தப் போரில் பொஹீமியர்கள் தோல்வியுற்றதால், அவர்கள் வெகு காலம் வரையில் சுதந்திரம் இழந்து தவிக்க லாயினர். அவ்வாறாக, பொஹீமியா முந்நூறு வருஷங்கள் வரையில் ஆஸ்திரிய ஹாப்ஸ்பர்க் சாம்ராஜ்யத்தில் ஓர் அடிமை மாகாணமாக இருக்கும்படி நேரிட்டது.

பொஹீமியர்கள் சுதந்திரத்தை இழந்தார்களெனினும், ஹாப்ஸ்பர்க் ஆட்சிக்கு அடி பணிய விரும்ப வில்லை. எனவே, அவர்கள் சுதந்திரம் கோரி, புரட்சி இயக்கத்தைத் தீவிரமாக நடத்தத் தொடங்கினார்கள். அந்த இயக்கத்தை நசுக்க ஹாப்ஸ்பர்க் சர்க்காரும் வெகு கடுமையான நடவடிக்கைகளைக் கைக் கொள்ள முற்பட்டார்கள்.

எனவே, செக் புரட்சி இயக்கத்தின் இணையற்ற தலைவரான தாமஸ் மஸாரிக்கும் அவரது சிடரான எட்வர்ட் பெனிசும் ஹாப்ஸ்பர்க் அடக்குமுறை ஆட்சிக்குப் பயந்து ஸ்விட்ஜர்லாந்தில் சரண் புகுந்தார்கள். பிறகு அவர்கள் பிரான்சுக்குச் சென்றார்கள். நேச தேசங்களில் இருந்து கொண்டு செக் நாட்டின் சுதந்திர இயக்கத்தைப் பலப் படுத்த வேண்டும் என்பதே அவர்களுடைய உறுதியான இலட்சியமாயிற்று.

அப்போது மசாரிக் ஆஸ்திரிய சர்க்காரால் மரண தண்டனை விதிக்கப் பட்டார்.

அதே சமயம் ஆஸ்திரிய-ஹங்கேரி ராணுவத்தில் இருந்த ஆயிர கணக்கான செக், ஸ்லோவேகிய சிப்பாய்கள் ருஷ்ய, இத்தாலித் துருப்புகளிடம் சரணடைந்தார்கள்.

ஹாப்ஸ்பர்க் சர்க்காரை எதிர்ப்பதற்காக பிரான்ஸ், ருஷ்யா, அமெரிக்கா முதலிய நாடுகளில் செக், ஸ்லோவேகிய சிப்பாய்கள் அடங்கிய இராணுவப் பிரிவுகள் உருவாக்கப் பட்டன.

மசாரிக்கும் இதர ஸ்லோவேகியத் தலைவர்களும் அமெரிக்காவில் சந்தித்து ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டனர். செக் பிரிவினரும் ஸ்லோவேகியர்களும் சேர்ந்து ஒரு தனி நாட்டைச் சிருஷ்டிக்க வேண்டும் என்பதே அந்த ஒப்பந்தத்தின் நோக்கமாகும்.

அப்போது ஏற்பட்ட தற்காலிக சர்க்காரை நேச தேசங்கள் செக்கோஸ்லோவேகிய மக்களின் சர்க்காராக அங்கீகரித்தன.

செக்கோஸ்லோவேகியா தனி நாடாக இருக்க வேண்டும் என்பது மசாரிக்கின் வெகு காலத்திய கனவாகும். மசாரிக் ஒரு கோச்ச




வண்டிக்காரரின் மகன். அவர் பக்கம் அதிர்ஷ்டம் இருந்ததால், அவர் இளம் வயதில் கல்வி கற்க முடிந்தது. பின்னர் அவர் வியன்னு, லீப்ஸிக் சர்வ கலாசாலைகளில் படித்து, செக் சர்வகலாசாலையில் பேராசிரியராக அமர்ந்தார். பிறகுதான் அவர் அரசியலில் பிரவேசித்து செக் நாட்டின் இணையற்ற தலைவராக விளங்கினர்.

செக் நாடு நாஜியர்களிடம் வீழ்ச்சியடையு முன், அதாவது 1937-ல் அவர் சுதந்திர செக்கோஸ்லோவேகியாவில் காலமானது அவரது அதிர்ஷ்டமே. ஆனல் அவருக்குப் பக்கபலமாக இருந்த அவரது புதல்வர் ஜான் மசாரிக்கும், எட்வர்ட் பெனிசும் தங்கள் நாடு கம்யூனிஸ்டுகளின் ஆதிக்கத்தில் இருப்பதைக் கண்டு மனம் உடைந்து இறக்க நேர்ந்தது.

* * *

**1918**ல் ஹாப்ஸ்பர்க் சர்க்கார் சின்னபின்னமாகியதால், செக்கோஸ்லோவேகியா ஒரு தனி நாடாகப் பிரகடனம் செய்யப்பட்டது. அந்த நாட்டை உருவாக்கிய மசாரிக் அதன் முதலாவது ஜனதிபதியானர்.

1933-ல் நாஜியர்கள் செக்கோஸ்லோவேகியாவைச் சேர்ந்த சில பகுதிகளில் ஜெர்மானியர்கள் வசிப்பதால், அவை தங்களைச் சேர வேண்டும் என்று வற்புறுத்தலாயினர்.

உடனே செக் நாடு பிரான்ஸ், இங்கிலாந்து முதலிய தேசங்களுடன் உறவு கொண்டு, தனக்குச் சொந்தமான பிரதேசங்கள் பறி போகாமல் காப்பாற்றிக் கொள்ள முற்பட்டது. எனினும், யுத்தம் ஏற்படாமல் தவிர்ப்பதற்காக இங்கிலாந்தும், பிரான்சும் ஜெர்மனியின் அநியாயமான கோரிக்கைகளுக்கு இணங்கி விட்டன.

அதுதான் சமயம் என்று, செக் நாட்டுக்குச் சொந்தமான பகுதிகளில் நாலாறு சதுர மைல் விஸ்திரணம் உள்ள பிரதேசத்தைப் போலந்து கைப்பற்றிக் கொண்டது; ஸ்லோவேகியாவிலிருந்து ஒரு பெரும் பகுதியை ஹங்கேரி அபகரித்துக் கொண்டது.

மசாரிக் காலமான பிறகு செக் நாட்டின் ஜனதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பெனிஸ் மேற்படி பதவியை ராஜிநாமா செய்து, இங்கிலாந்துக்குச் சென்றுவிட்டார். எனவே, 1939-ம் வருஷம் இரண்டாவது உலக மகாயுத்தம் ஆரம்பமாவதற்குச் சில மாதங்களுக்கு முன் ஜெர்மன் துருப்புகள் செக் நாட்டில் அக்கிரமமாகப் பிரவேசித்து, எஞ்சியிருந்த பிரதேசங்களையும் தங்கள் வசப்படுத்திக் கொண்டன.

இங்கிலாந்து சென்ற பெனிஸ் சும்மா இருக்கவில்லை. நாஜியர்களுக்குப் பயந்து வெளிநாடுகளுக்கு ஓடிய செக்கோஸ்லோவேகியர்களுக்குத் தலைமை வகித்து செக் நாட்டின் சுதந்திரத்துக்காகப் பாடுபட்டு வந்தார். செக்கோஸ்லோவேகியாக் குடியரசின் முதலாவது ஜனதிபதி மசாரிக்கின் புதல்வர் ஜானும், மற்றும் சில செக் நாட்டுத் தலைவர்களும் பெனிசுக்குப் பக்கபலமாக இருந்தார்கள்.

பெனிசின் தலைமையில் வெளிநாடுகளில் உருவான செக்கோஸ்லோவேகிய சர்க்காரை 1941-ம் ஆண்டில் பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா, ருஷ்யா முதலிய வல்லரசுகள் அங்கீகரித்தன.

1945-ம் வருஷம் கிழக்குத் திசையிலிருந்து ருஷ்யத் துருப்புகளும் மேற்குத் திசையிலிருந்து அமெரிக்கத் துருப்புக்களும் செக் நாட்டில் பிரவேசித்தன. அப்போது ஜெர்மனிக்கு எதிராக நடந்த புரட்சியில் பதினையாயிரம் செக் மக்கள் ஜெர்மானியர்களால் பலியாயினர்.

செக் நாட்டில் பிரவேசித்த ருஷ்யர்கள் சிறிது சிறிதாகத் தங்களுடைய நிலைமையைப் பலப்படுத்திக் கொள்ளத் தொடங்கினர். எனவே ஜனதிபதி எட்வர்ட் பெனிஸ் தமது விருப்பத்துக்கு விரோதமாகக் கம்யூனிஸ்டுகளையும் செக் மந்திரி சபையில் சேர்த்துக் கொள்ளும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

அவர்கள் மந்திரி சபையில் சேர்ந்த பின் செக் நாடு எங்கும் அவர்களுடைய அடக்குமுறை ஆரம்பமாயிற்று. செக்கோஸ்லோவேகியா வெளிநாட்டு மந்திரியும் ஜனதிபதி மசாரிக்கின் புதல்வருமான ஜான் மசாரிக் திடீரென்று இறந்து கிடந்தார். அவர் தற்கொலை செய்து கொண்டு விட்டதாகக் கம்யூனிஸ்டு அதிகாரிகள் சாதித்தனர்.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10

REGD. NO. M. 4392

*Registered as a newspaper in Ceylon*





# நாளுக்கு நாள் அதிக தெளிவான, எழிலோங்கும் சருமம்

ரெக்ஸோனாவிலுள்ள **கேடில்** இந்த அற்புத வேலையைச் செய்யட்டும்



தினமும் ரெக்ஸோனா சோப் உபயோகியுங்கள். இதன் கேடில் கலந்த நுரை உங்கள் சருமத்தை நாளுக்கு நாள் அதிக மிருதுவாகவும், தெளிவாகவும் இருக்கச் செய்யும்.




## ரெக்ஸோனா

### கேடில்* கலந்த சோப் இது ஒன்றே

* சருமத்திற்கு ஊட்டமளித்து மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர்.



ரெக்ஸோனா ப்ரொப்ரைட்டரி லிமிடெட்டுக்காக இந்தியாவில் தயாரித்தது.